Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 318

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100

பேரருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர்
திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி — ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1975வரு மார்கழிமாத வெளியீடு

# ஸ்ரீ ராமாநுஜன் சந்தா வரவுகள்.

(சென்ற விதழ்களின் தொடர்ச்சி)

ஸ்ரீமான்கள்

வரதராஜ ஐயங்கார், பெங்களூர் ரூ. 100 (ஜீவியச் சந்தா)
A. T. கோவிந்தாசாரியர், அனந்தபூர்
M. நவஜீவன், திருச்சி
கபிஸ்தலம் ஸ்ரீநிவாஸாசாரியர் சென்னை-33
P, R. ஸ்ரீநிவாஸன், திருப்பாபுலியூர்
K K. பக்திஸாரன், பெங்களூர்
T. பார்த்தசாரதி ஐயங்கார், B. A., B. L., காரைக்குடி
A. ஸ்ரீநிவாஸாசாரியர், சென்னை-61
C. V. ராஜன் பெங்களூர்
சீதாராமன், சென்னை-83
D. ஜகந்நாதன் சென்னை 44
V. ராகவன் சென்னை33.
ஸ்ரீமதி M. N. சிங்காரம்மா மண்ட்யா
யதுகிரியம்மாள், பெங்களூர்
ஜெகந்நாதன், Madras-44
S. ராமஸ்வாமிதாதம், Madras–15
T. S. Vasan, Madras-1
V. P. K. Charya, Madras-11
P. K. ராஜைய்ய செட்டியார், சீர்காழி
P. Ramanujam, Madras-15
ஸ்ரீரங்கநாச்சியார், கோபிசெட்டிப்பாளையம்
K. ரகுநாத ஐயங்கார், Advocate, காஞ்சீபுரம்
ஸௌந்தரராஜ ஐயங்கார், கோயம்புத்தூர்
V. V. ஸுப்பாராவ், ஹைதராபாத்

# ஸ்ரீ ராமாநுஜன்—518



ஆசிரியர்:
மஹாமஹோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 27 | 13—1—75<br>ஆனந்த வருஷம் மார்கழி மாத வெளியீடு | ஸஞ்சிகை 6 |
|---|---|---|


# மார்கழிமாதச் சிறப்பு

மார்கழிமாதப் பத்திரிகையாக வெளிவருகின்ற இவ்விதழ் மார்கழிமாதத்தின் சிறப்பைச் சுருக்கமாக வுணர்த்த விரும்புகின்றது. மார்கழிமாதத்திற்குச் சிறப்பு இரண்டுவகைகளினாலாகும். ஒன்று "சூடிக்கொடுத்த சுடர்க்கொடி யென்னும் ஆண்டாளருளிய திருப்பாவையை ஸுப்ரபாதகாலத்தில் ஸகல ஸந்நிதிகளிலும் பெரிய கோஷ்டியாக விருந்து ஸேவித்து. தீர்த்தப்ரஸாத ஸ்வீகாரத்தோடு தலைக்கட்டுவது அநாதி ஸம்ப்ரதாயமுறையில் நிகழ்ந்துவருவது ஒரு சிறப்பு. அந்தத் திருப்பாவையின் பொருளைப் பூர்வாசார்யவியாக்கியான மூலமாக ஆசாரியர்களிடம் குனிந்து கேட்பது பலபல விடங்களில் இற்றைக்கும் நிகழ்ந்து வருவது ஒரு சிறப்பு. நாடுதோறும் நகரந்தோறும் குழாங்கூடித் திருப்பாவை யுபந்யாஸம் பல பண்டிதர்கள் செய்துவருவது ஒரு சிறப்பு. இதெல்லாம் ஒருபுறமிருக்க, திருவத்யயநோத்ஸவம் என்று விஷ்ணுவாலயங்கள்தோறும் இருபத்தொருநாள் நடத்திவருவது மார்கழிமாதத்திற்கு மிக மேம்பட்ட அதிசயமாகும். இருபத்தொருநாள் இவ்வுத்ஸவத்தை நடத்த ஸௌகரியமில்லாத தலங்களில் பத்துநாளோ, ஐந்து நாளோ, ஒருநாளோ நடந்தேதீரும். ஆழ்வார்களின் பாடல்பெற்ற திருப்பதிகளில் பெரும்பாலும் இருபத்தொருநாள் அல்லது பதினொரு நாள் நடந்தேதீரும். ...

# கோயிலில் அரையர் ஸேவையின் அழிவு

ப்ரஸ்துதமான திருவத்யயநோத்ஸவமானது திருவரங்கம் பெரிய கோயிலென்கிற நம்பெருமாள் ஸந்நிதியில் விசேஷவைபவம் பெற்றுவருவது அரையர் ஸேவையினாலென்பதை நேரில் ஸேவித்தவர்களின் நெஞ்சு உணரும். பகற்பத்து மஹோத்ஸவம் 10 நாளும் ஸந்நிதிக்குள்ளிருக்கும் அர்ஜுன மண்டபமென்கிற

சீரிய திருமண்டபத்தில் ஆழ்வாராசாரியர்கள் திருவோலக்கமிருக்க நடைபெறுவது. இராப்பத்து பத்துநாளும் ஆயிரக்கால் மண்டபத்திலே நடைபெறுவது. பகற்பத்துத் தொடக்கத்திற்கு முதல்நாளிரவு பெரிய பெருமாளுடைய ஆஸ்தானத்தில் திருநெடுந்தாண்டகம் அரையர் ஸேவை. இராப்பத்துக்கு மறுநாள் பெரிய பெருமாளுடைய ஆஸ்தானத்திலேயே இயற்பா ஆயிரம் அமுதனார்ஸேவை. அமுதனார் ஸேவையென்றது முன்னுள் வழக்கத்தை யொட்டி எழுதினபடி. இப்போது சில வருஷகாலமாய் அதுவும் அரையர் ஸேவையே யாயிற்று.

முதல்நாள் திருநெடுந்தாண்டக ஸேவை ஏதற்காகவென்னில்; இதுபற்றிபட்டர் காலத்திலேற்பட்ட வரலாற்றைவிளக்கக்கேளீர். மேல்நாட்டில் மாதவாசார்யரென்கிற வேதாந்தி அத்வைத ஸம்ப்ரதாயஸ்தராயிருந்தார். அவரைத் திருத்திப் பணிகொள்ள வேணுமென்று எம்பெருமானார் சரமதசையில் பட்டர்க்கு நியமித்திருந்தார். அந்தக்கட்டளையை நிறைவேற்றுவதற்கு பட்டர் ஸமயம்பார்த்திருந்து மேல்நாட்டுக்கு எழுந்தருளவேண்டியிருந்தது. ஐப்பசி மாதமுடிவில் எழுந்தருள நேர்ந்தது. வேதாந்திகளோடே வாதம் புரிந்து அவரைத் திருத்திப்பணி கொண்டாயிற்று, முக்கியமாகத் திருநெடுந்தாண்டக திவ்யப் பிரபந்தத்தின் திவ்யார்த்தங்களைப் பொழிந்தே திருத்தியருளினதாக ப்ராமாண நூல்களிலுள்ளது. காரியம் தலைக்கட்டினவாறே திருவரங்கம் பெரிய கோயிலுக்குத் திரும்பி யெழுந்தருள வேண்டியதுதானே. அப்போது அத்யயநோத்ஸவம் ஸமீபித்திருந்தது. அதற்குச்சென்று சேரவேணுமென்று பாரித்துக் கனவேகமாக மீண்டெழுந்தருளுகையில் பகற்பத்துத் தொடக்கத்திற்கு முதல் நாள் (அமாவாஸ்யையன்று) கோயில் சேர்ந்தாயிற்று. அன்று பெரிய பெருமாளைத் திருவடித்தொழ ஸந்நிதிக் கெழுந்தருளினபோது பெருமாள் அர்ச்சகமுகேந 'பட்டரே! விடைபெற்றுப்போனகாரியம் தலைக்கட்டிற்றோ? எங்ஙனே தலைக்கட்டிற்று?' என்று வினவியருள, பட்டர் 'இங்ஙனே தலைக்கட்டிற்று' என்று திருநெடுந்தாண்டகத்தின் முதற்பதிகத்தைப் பெரிய திருவோலக்கத்திலே பாக்கவுடநபிநயித்தருளினார். அதனை ஆண்டுதோறும் திருச்செவி சாற்றியருளத் திருவரங்கேசன் திருவுள்ளம்பற்றியருள அவ்வண்ணமாகவே நடைபெற்றுவருகின்றது. ஆனால் இந்த ஸந்நிதியில் அருளிச் செயல ஸேவை அரையர்களின் ஆட்சியிலுள்ளதாதலால் பட்டர் இக் கைங்கர்யத்தை அரையர்களுக்கே ஒப்படைத்தார். அந்நாள் தொடங்கி அரையர் ஸேவையாகவே இது நடந்து வருகின்றது. இதுதான் திருநெடுந்தாண்டக ஸேவைக்கு நிதானம்.

முந்துற முன்னம் அரையர்கள் பெரிய பெருமாளுடைய மூலஸ்தானத்திற் கெழுந்தருளி அங்கே அருளிப்பாடும் வரிசைகளும் பெற்று தேவகானத்திலே முதற்பாசுரத்தைத் தாளத்துடனே அநுஸந்தித்து விடைபெற்று வெளியே போந்து திருநெடுந்தாண்டக ஸேவையைத் தொடங்குகிறார்கள். முதற் பாட்டுக்கு அபிநயமும் வியாக்கியானமும் ஸேவித்து, இடையிடையிற் சில பாசுரங்களுக்குத் தம்பிரான்படி ஸேவித்துப் பத்துப் பாசுரத்தளவில் நிறுத்திவிடுவர்கள். இதுவே திருநெடுந்தாண்டக ஸேவை. அன்று பக்தர்களின் குதூஹலம் வாசாமகோசரம்.

மறுநாள் முதலாக [பிரதமை முதல் தசமியளவாக] பகற்பத்து எனப்படும், நாள்தோறும் காலை ஏழரை மணிக்கு நம்பெருமாள் மூலஸ்தானத்திலிருந்து புறப்

பாடு கண்டருள்வர். ஏழரையென்றால் ஏழரைதான். 7-29 அல்ல 7-31 அல்ல. அந்தப் புறப்பாட்டு நேரத்தைக்கொண்டு பலர் தம்தம் ரிஸ்டுவாட்சை ஸரிப்படுத்திக்கொள் வர்கள். ஸ்தானிகர் ஸ்ரீபாதம் தாங்குவாரான ஸ்ரீவைஷ்ணவஸ்வாமிகளுக்கு அருள் பாடிடுவதும் கிழக்கிலும் மேற்கிலுமாக ப்ரபன்னபாகையுடன் நிற்குமந்த ஸ்ரீபாதத் தவர்கள் நாயிந்தே! என்று முழங்குவதும், உடனே அவர்கள் உள்ளே சென்று பெரு மாளை எழுந்தருளப்பண்ணிப் புறப்பட, திருத்திரை நீக்க அருள்பாடிடுவதும், வலமா கத்திருப்பிப் படியடியில் ஸ்ரீரங்க நாராயண ஜீயர் பட்டர் அண்ணன் முதலான ஆசார்ய புருஷர்களுக்கு விலக்ஷணமான மரியாதை ப்ரஸாதிப்பதும், அரையர் கானத்துடனும் அந்தரங்க பக்த கிங்கரரின் கர்ணாமிருதமான விருது பொலிந்த ஏச்சரிக்கை முழக்கத்துடனும் *விண்ணின் மீதமரர்கள் விரும்பித்தொழ அர்ஜுன மண்டபம் நோக்கி யெழுந்தருள்வதும் விண்ணுளார்க்கும் கிடைப்பரிய மண்ணுளா ரின் மஹாபாக்யமென்னு மத்தனை. ஆழ்வார்களுமாசாரியர்களும் முன்னடியே மண்டபம் சேர்ந்து நம்பெருமாள் வரவை நோக்கியிருப்பர்கள். பராங்குச பரகால யதிவரர்கள் மூவருமே ஸ்ரீரங்கநாதனுடைய தனிச்சிறப்பைப் பெற நிறைபடியே யிருந்து பெற்றபின் வீற்றிருப்பர்கள். ஆழ்வார்களுக கெல்லாம் மரியாதையாகி அரையர்களுக்கும் அருளிப்பாடாகி—ஒன்பது மணிக்கு ஸேவை தொடக்கமாகும்.

1. **முதல் நாள்.** திருப்பல்லாண்டு தொடங்கிப் பெரியாழ்வார் திருமொழி இரண்டாம் பத்து – ஒன்பதாம் திருமொழி யளவும ஸேவை நான்கு மணி காலம் நடைபெறும். திருப்பல்லாண்டு முதலிரண்டு பாட்டுகளுக்கு அபிநயமும் வியாக் கியான ஸேவையுமாகும். பிறகு திருவாராதனமும் கோஷ்டி விநியோகமுமாகி, ஆழ்வாராசாரியர்கள் புறப்பாடு கண்டருளி ஸ்தோத்ரபாட கோஷ்டியுடன் எழுந் தருள்வர்கள். முன்னம் நம்மாழ்வார் தமது ஸந்நிதிக்கு எழுந்தருள, ஸந்நிதி வாசலில் காத்திருக்கும் மற்றையாழ்வாராசாரியர்களுக்கு நம்மாழ்வாருடைய ஸ்ரீ பாதுகையான ராமாநுஜன் ஸாதிக்கப்படுகிற அதிசயம் அநுபவிக்கத்தக்கது. நம் மாழ்வார்க்கு ஜ்யேஷ்டர்களான முதலாழ்வார்களும் திருமழிசைப் பிரானுங்கூட அந்த ஸ்ரீ பாதுகை ஸாதிக்கப் பெறுவர்கள். இதனால் நம்மாழ்வாருடைய அவய விதவமும் மற்றையோருடைய அவயவத்வமும் விளக்க முற்றதாகும். இவ்வதிசயம் திருவரங்கம் பெரிய கோயிலுக்கு அஸாதாரணமானது. பிறகு அவ்வவ ஆழ்வார் களும் ஆசாரியர்களும் தம தம ஸந்நிதிசேர, முடிவாக எம்பெருமானார் ஸந்நிதி யில் ஸ்தோத்ரபாட கோஷ்டி சாத்தப்படும். பராங்குச பஞ்சவிம்சதி, நக்ஷத்ர மாலிகை, யதிராஜ விம்சதி, ஸ்தோத்ரரத்னம் இவை யநுஸந்திக்கப்பட்டு தீர்த்த ப்ரஸாத விநியோகத்துடன் (உடையவர் ஸந்நிதியில்) தலைக்கட்டியாகும். இது நித்யக்ரமம். பிறகு ஆறுமணிக்குப் பெருமாள் அர்ஜுன மண்டபத்திலிருந்து புறப் பாடு கண்டருளி நடையழகு காட்டிக்கொண்டே ஆஸ்தானம் சேர மூன்று மணி காலமாகும் வழி முழுதும் உபயக்காரர்களின் வழிபாடு நடைபெறும். காலை வேளைப் புறப்பாட்டிற் காட்டிலும் இப்புறப்பாடு வீறுபெற்றிருக்கும்.

2. **இரண்டாம்நாள்** பெரியாழ்வார் திருமொழி இரண்டாம் பத்தின் பத்தாந் திருமொழியாகிய *ஆற்றிலிருந்து தொடங்கி, ஐந்தாம் பத்தின் மூன்றாந் திருமொழி

*துக்கச்சுழலை முடிய பாசுரங்கள் (240) இன்று ஸேவிக்கப்படும். *ஆற்றிலிருந்து* *தன்னேராயிரம்* இவ்விரண்டு பாட்டுக்களுக்கு அபிநயமும் வியாக்கியான ஸேவையும்.

3. மூன்றுநாள். பெரியாழ்வார் திருமொழி ஐந்தாம்பத்து நான்காந் திருமொழி *சென்னியோங்கு தொடங்கி, நாச்சியார் திருமொழியில் (12. தி.) *மற்றிருந்தீர் கட்கு* முடிய பாசுரங்கள் 164 இன்று ஸேவிப்பது. *சென்னியோங்கு *மார்கழித் திங்கள்* இவ்விரண்டு பாசுரங்களுக்கும அபிநயமும் வியாக்கியான ஸேவையு முண்டு. *சென்னியோங்குக்கு அபிநயமும் வியாக்கியான ஸேவையுமானதும் அத்திருமொழியில் மேற் பாசுரங்களையும்-அபிநயம் முன்னும் பாசுரஸேவை பின்னுமாய் ஏழாவது பாட்டு இரண்டாமடி 'திருப்பொலிந்த சேவடி யென் சென்னியின்மேல் பொறித்தாய்' என்னு மளவும் அபிநயத்தோடு ஸேவித்து நிறுத்தி, பெருமாள் திருவடிகளை தம் திருமுடியில் பொறிக்கப்பெற்ற பெரியாழ்வாருடைய பாக்யத்தை அநுகரிப்பதாய் அரையர் பெருமாளிடமிருந்து ஸ்ரீ சடகோபனைத் தமது முடியில் தரித்துவந்து ஆழ்வாராசாரியர்களனைவர்க்கும (அரையர்) தமது திருக்கையால் ஸாதித்து கோஷ்டியாரனைவர்க்கும் (பெண்களுக்கு உட்பட) தாமே ஸாதிப்பர். இதற்கு ஒருமணி யவகாசத்திற்கு மேலாகும். இத்தகைய நிகழ்ச்சி எம்பெருமானார் திவ்யாஜ்ஞையினாலன்றி மற்றொருவர் கட்டளையினால் இங்ஙனே செல்லாது! இதற்குப்பின், பெரியாழ்வார் திருமொழியைத் தலைக்கட்டி, திருப்பாவை முதற்பாட்டின் அபிநய வியாக்கியானங்களைத் தலைக்கட்டி நாச்சியார் திருமொழியில் பன்னிரண்டு திருமொழியளவும் ஸேவித்து நிறுத்தியாகும.

4. நான்காநாள். நாச்சியார் திருமொழி (13) *கண்ணனென்னுங்கருந் தெய்வம்* தொடங்கித் திருச்சந்தவிருத்தம் முடிய பாசுரங்கள் 245 இன்று ஸேவிப்பது. *கண்ணனென்னும் பாசுரத்திற்கும், (பெருமாள் திருமொழி) *இருளிரிய பாசுரத்திற்கும் அபிநய வியாக்கியானங்களுண்டு. *கண்ணனென்னும் பாசுரத்திற்கு அபிநய வியாக்கியானமாகி, அத்திருமொழியில் மூன்றாம்பாட்டில் [*கஞ்சைக் காய்ந்தகருவில்லி* என்னும் முதலடியில்] ப்ரஸ்துதமான கம்ஸவத வ்ருத்தாந்தத்தை நடித்துக் காட்டுவதற்காக—"அழகியமணவாளப் பெருமாள் கம்ஸவதம் செய்தருளினபடி எவ்வண்ணமோ வென்னை?" என்று கேள்வியையிட்டு மூன்றுவிசை சொல்லிவிட்டு, அத்திருமொழியில் மிச்சமுள்ள பாட்டுக்களை ஸேவியாமல் அந்த (*பட்டிமேய்ந்தோர் காரேறு*) திருமொழி தொடங்கப்பெற்று திருச்சந்தவிருத்தம் முடிய ஸேவித்துத் தலைக்கட்டப்படும். திருச்சந்தவிருத்தத்தில ஒரு பாசுரத்திற்கும் அபிநய வியாக்கியான ஸேவைகள் இல்லை. இன்று பகல்மேல் இரண்டாம் ஸேவையுண்டு—கம்ஸவதத்திற்காக. கம்ஸவத விஷயமான தம்பிரான்மார்படி வியாக்கியானம் ஸேவித்து "அழகியமணவாளப்பெருமாள் கம்ஸவதம் செய்தருளினபடி இவ்வண்ணமே" என்று சொல்லி க்ருஷ்ணாவதாரம் முதல் கம்ஸவதம் வரை நடித்துக் காட்டி அத்திருமொழியில் சேஷபூரணத்திற்காக "நடைக்கணெய்தும் சிறைக் கோவல்" என்று தொடங்கி ஸேவித்துப் பூர்த்தி செய்யப்படும்.

5. ஐந்தாந் திருநாள். திருமாலை தொடங்கி *அமலனாதிபிரான் முடிய பாசுரங்கள் 65 மட்டுமே ஸேவிக்கப்பெறும். திருமாலை முதற்பாட்டுக்கு அபிநய வியாக்-

யானமானதும் மேல் பாட்டுக்கள் அபிநயம் மூன்றும் பாசுரம் பின்னுமாய் ஆறும் பாட்டு மூன்றுமடி முடிய ஸேவிக்கப்படும். அதில் *அரங்கனுக்கு ஆட்செய்யாதே* என்னுமிடத்தில் நம்பெருமாள் திருவத்யயநோத்ஸவ வைபவத்தை, புறப்பாடு திருவாராதனம், வேதவிண்ணப்பம் அருளிப்பாடு முதலிய ஸகல விவரணத்துடனும் அபிநயித்துக் காட்டி [ஒருமணி காலத்திற்குமேல் இங்ஙனே சென்றபிறகு] மேற்பாசுரங்கள் ஸேவித்து *அமலனாதிபிரான் முடித்து நிறுத்துவர்கள்.

6. **ஆறும் நாளில்** *கண்ணிநுண் சிறுத்தாம்பு தொடங்கிப் பெரியதிருமொழி மூன்றும்பத்து ஐந்தாந் திருமொழிமுடிய பாசுரங்கள் 261 ஸேவிப்பது. *கண்ணிநுண்சிறுத்தாம்பு, *வாடினேன்வாடி இவ்விரண்டு பாட்டுக்களுக்கு மட்டும் அபிநயமும் வியாக்கியானஸேவையும நடைபெறும்.

7. **ஏழாம்நாள்.** பெரியதிருமொழி மூன்றும்பத்து ஆறந்திருமொழி *தூவிரிய மலருழக்கி தொடங்கி ஐந்தாமபத்து ஆறந் திருமொழி *கைமமான மழகளிற்றை முடிய பாசுரங்கள் 210 இன்று ஸேவிககப்பெறும். *தூவிரியமலருழக்கி பாட்டுக்கு அபிநயமும் வியாக்கியான ஸேவையுமாகி மேற்பாசுரங்கள் ஸேவிக்கையில் பாட்டு 5. *வாளாய கண்பனிப்பவில் "ஓ மண்ணளந்த தாளாளா!" என்னுமிடத்தில் ப்ரஸ்துதமான வாமனாவதார விருத்தாந்தத்தை நடித்துக் காட்டுவதற்காக அப்போது "ஓ மண்ணளந்த தாளாளா! ஓ மண்ணளந்த தாளாளா! ஓ மண்ணளந்த தாளாளா!" என மூன்று விசை ஸேவித்து "அழகிய மணவாளப் பெருமாள திருவுலகளந்தருளினபடி எவ்வண்ணமேயென்ன" என்று கேள்வியைமட்டும உத்க்ஷேபித்து நிறுத்தி, அத்திருமொழியில் மேற்பாசுரங்களை ஸேவியாமல் நிறுத்தி மேல் திருமொழி தொடங்கி ஸேவித்து முடிப்பர்கள். பிற்பகலில இரண்டாம் ஸேவையில வாமனாவதார விஷயமான தம்பிரான்படி வியாக்கியானம் ஸேவித்து அவ்வவதார வ்ருத்தாந்தங்களை நடித்துக் காட்டி, காலை ஸேவையில் நிறுத்தி வைக்கப்பட்டிருநத பாசுர சேஷத்தை ஸேவிக்கத் தொடங்கி "தண்குடந்தை நகராளா வரை யெடுதத தோளாளா" என்றாரம்பித்து அத்திருமொழியை முடித்திடுவர்கள். அந்த ஸமயம நாம் மண்ணுலகத்திலிருப்பதாகவே தோன்றாது.

8. **எட்டாந் திருநாளில்.** பெரிய திருமொழி ஐந்தாம்பத்து ஏழாந்திருமொழி *பண்டை நான்மறை தொடங்கி எட்டாம் பதது முதல் திருமொழி *சிலையிலங்கு பொன்னாழி முடிய பாசுரங்கள் 250 ஸேவித்தாகும. *பண்டை நான்மறையும* என்கிற பாட்டுக்கு மட்டும் அபிநயமும் வியாக்கியான ஸேவையும், பாசுரத்தின் முடிவில் *அரங்கமா நகரமர்ந்தானே* என்னுமிடத்தில் அவதார வைபவங்கள் *அபிநயித்துக் காட்டப்படும். பிறகு அரங்கம் என்கிற சொல் சேர்ந்துவரும் சந்தைகளனைத்தும் [ஏறக்குறைய எழுபது.] ஸேவிக்கப்படுவது பேரின்பவெள்ளம் பெருக்கும். அத்திருமொழி நாலாம் பாசுரமான மாயிருங்குன்றமொன்று மத்தாகவில் ஆயிரந்தோளால் அலைகடல் கடைந்தான்* என்று ப்ரஸ்துதமான அம்ருதமதன விருத்தாந்தத்தைப் பிற்பகலில் நடித்துக் காட்டுவதற்காக அத்துடன் நிறுத்த வேண்டி "அழகிய மணவாளப் பெருமாள் அம்ருதமதனம் செய்தருளினபடி யெவ்

வண்ணமே யென்னை" என்று மூன்று விசை சொல்லிவிட்டு மேற்பாசுரங்களை ஸேவியாமலே நிறுத்தி, மேல் திருமொழி தொடங்கி [*ஏழையேதலன்] முதலாக ஸேவித்துத் தலைக்கட்டுவர்கள். பிறகு இரண்டாம் ஸேவையில் அம்ருதமதன விஷயமான தம்பிரான்படி வியாக்கியானம் ஸேவித்து, காலை நிறுத்தியிருந்த சேஷத்தை ஸேவித்து முடித்தாகும்.

9. ஒன்பதாந் திருநாளில் பெரியதிருமொழி எட்டாம்பத்து இரண்டாந் திருமொழி *தெள்ளியீர் தேவர்க்குந் தேவர் தொடங்கி பத்தாம்பத்து முதல்திருமொழி *ஒருநல்சுற்றம் முடிய பாசுரங்கள் 200 ஸேவித்தாகும். ※தெள்ளியீர் பாசுரத்திற்கு மட்டும் அபிநயமும் வியாக்கியான ஸேவையும். இன்றைக்கும் இரண்டாம் ஸேவையுண்டு. அதில் முத்துக்குறி. மறுநாள் ஸேவிக்கப்போகிற திருநெடுந் தாண்டகத்தை ஆகர்ஷித்து அதில் முதற்பாட்டுக்கு அபிநய வியாக்கியானங்கள். பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் ஸேவித்து முடிந்ததும் முதற்பாட்டிலிருந்து பாட்டுக்கும் பாசுரம் முடிய பாட்டுக்களுக்குத் தம்பிரான்படி ஸேவிப்பர்கள். பதினோராம் பாட்டில் கட்டுவிச்சி சொல்லுங் கூடல்குறியை முத்துக்குறியாக அபிநயித்துக் காட்டுவர்கள். முத்துக்குறிக்காக அரையர் பெருமாளிடமிருந்து தீர்த்தமும் ஸ்ரீ சடகோபனும் கொணர்ந்து ஆழ்வாராசாரியர்களுக்கும் கோஷ்டியனைத்துக்கும் ஸாதிப்பர். கீழ் மூன்றுந்திருநாளில் ※திருப்பொலிந்த சேவடிக்காக ஸ்ரீசடகோபன் ஸாதிப்பது மட்டுமே இன்று தீர்த்தமுமுண்டு. இங்ஙனே நாளைக்குமுண்டு.

10. பத்தாந்திருநாளில் பெரிய திருமொழி பத்தாம்பத்து இரண்டாந் திருமொழி *இரக்கமின்றி தொடங்கி திருத்தாண்டகங்கள் முடிய ஸேவித்தாகும். இரக்கமின்றிக்கு மட்டும் அபிநய வியாக்கியானங்கள். பிற்பகலில் அலங்காரம் அமுது செய்தானபின் ராவணவதத்திற்கு அருளிப்பாடு ஆகும். கொண்டாட்டங்களால் பெருமாளைக் கொண்டாடி பெரியதிருமொழியின் சாத்துப் பாசுரமும் திருநெடுந்தாண்டகத்தின் சாத்துப் பாசுரமும் (ஒவ்வொன்று) ஸேவித்து சாத்துமுறை செய்தாகும். இன்றைக்கும் அரையரால் தீர்த்த ஸ்ரீசடகோப விநியோகம் நடைபெறும். இன்று பெருமாள் நாச்சியார் திருக்கோலம் கொள்வது பக்தர்களுக்குப் பெரும்பேறாகும். காலை புறப்பாடு கண்டருளும்போதே நாச்சியார் திருக்கோலத்துடன் புறப்பட்டாகும். மாலையில் வெளிப்புறப்பாடாகி ஒன்பதுமணிக்கு ஆஸ்தானம் சேர்ந்தாகும். இவ்வளவோடு சிறிய திருவத்யயநோத்ஸவமென்னும் திருமொழித் திருநாளென்று வழங்கப்படுகிற பகற்பத்து நிகழ்ச்சி ஒருவாறு தெரிவித்தாயிற்று. இது மிகவும் ஸங்க்ஷேபமாகத் தெரிவித்தபடி. நேரிலநுபவிப்பார்க்கு இமையவர் நேராவார்தாமே. இனி திருவாய்மொழித் திருநாளென்கிற இராப்பத்தின் வைபவமிருக்குப்படி கேண்மின். ... ... ...

## திருவாய்மொழித் திருநாள் நிகழ்ச்சி

1. வைகுண்ட ஏகாதசி நன்னாள். மார்கழித் திங்களில் இதுவன்றோ மதிநிறைந்த நன்னாள். நம்மை வைகுண்டத்திலிருப்பதாக நினைக்கச் செய்யும் ஏகாதசி—வைகுண்ட ஏகாதசி என்று கொள்க. இன்று விடியற்காலம் நாலுமணிக்கு ரத்னங்கியுடன் புறப்பாடு. திருவாசல் திறப்பது ஆறுமணிக்கு. அங்கிருந்து சார்த்

தூலகதியில் அதிவேகமாகத் திருமாமணி மண்டபத்திற்கு முன் கொட்டகையில் ஆழ்வாரைக் காணவேணுமென்னும் அபிநிவேசத்துடன் எழுந்தருள்வதானது எவர்க்குமே கண்ணுள்நின்றகலாததோர் காட்சியாகும். ஸ்ரீ பராங்குச பரகால யதிவரர் மூவரும் எதிர்த் திருமண்டபத்தில் கீழ்கோபுர வாசலுக்கு நேராக எழுந்தருளி நிற்க, மரியாதையாகி அரையர் ☼உயர்வற வுயர்நலம் தொடங்குவதும் ஆழ்வாரைத் திருமுன்பே அழைத்துக்கொள்ளுவதும், அந்த ஹர்ஷப்ரகர்ஷத்துக்கு ப்ரகாசமாக ஒய்யார நடையிட்டுக் கொட்டகையில் பத்தி யுலாவுவதும் படியேத்தம் திருவந்திக் காப்புடன் திருமாமணி மண்டபம் சேர்ந்து மிகவுத்துங்கமான திவ்யாஸ்தான மண்டபத்திலே எதிரே ஆழ்வாராசாரியர்களின் திரளை ☼இருந்தான் கண்டு கொண்டு☼ என்னுமருளிச் செயலை நினைப்பூட்டுமாறு மாலை ஆறுமணிவரை ஸேவார்த்திகளுக்குப் படிவிடுவதும், உபயவிபூதியிலும் இவ்வளவுதான் ஜீவராசிகளென்று நிர்ணயிக்கலாம்படி ☼துன்னிட்டுப் புகலரியதாய், எந்த ப்ராகார வீதியும் ஜனஸங்க ஸங்கட்டிதமாய்த் திகழும் பெரிய திருநாள் இதுவன்றோ. மாலை 6 மணிக்கு அரையர் எழுந்தருளி☼ உயர்வற வியாக்கியானம் அபிநயத்துடன் ஸேவிப்பர். ஈடு முப்பத்தாறுபிரம் மூன்றும் ச்ரிய:பதி ஸேவித்து முதற்பாட்டுக்கும் ஈடு ஸேவிப்பர். முதற் பத்து பூர்த்தியாகும். திருப்பாவாடை முதலானவையாகி வீணை வாத்தியத்துடன் புறப்பட்டருளி ஆஸ்தானம் சேர்ந்து பன்னிரண்டு மணியாகும். புறப்பாட்டுக்கு முன் திருமண்டபத்தில் ரத்னங்கி படிகளையப்பெறும் பெரிய பெருமாள் முத்தங்கி ஸேவை ப்ரபாதத்திலிருந்தே தொடங்கியாகும்.

2. **இரண்டாந் திருநாள்.** பகல் 11-30க்கு பட்டர் திருவம்சஸ்தர்களில் முறைகாரர் குடை திருச்சின்னங்களுடன் ஆர்யபடாள் வாசலளவும் எழுந்தருளி உள்ளே சென்றபின் திருக்காப்பு சேர்த்து உள் திருவாசலும் திருக்காப்பு சேர்த்துப் பன்னிரண்டு மணிக்குப் புறப்பட்டருளி உத்தம நப்பிகள் பிள்ளைப் பெருமாளையங்கார் பாடலென்று (அஷ்டப் பிரபந்தத்திலில்லாத) பல பாட்டுகளைத் திருமுன்பே பாடிக்கொண்டு கண்ணாடி முன் நம்பிள்ளை திருவோலக்கமென்னு மிடத்திலே ஒய்யார நடையுடன் திருவாசல் முன்பு அருளிப் பாடாகித் திருக்காப்பு நீக்கி த்வஜஸ்தம்ப மண்டபம் சேர்ந்து ஒய்யார நடையுடன் தொரை ப்ரதக்ஷிணத்தில் பரமபத வாசலிருக்கும் பக்கம் நாலுகால் மண்டபத்தில் வேத் விண்ணப்பமாகி தீர்த்தம் விடாய் பருப்பு கோஷ்டியாகி பரமபத வாசல் திறந்து வெளியே எழுந்தருள்வது. வரிசையாய் உபயங்கள் கண்டருளிக்கொண்டே யெழுந்தருள்வது. முன்னம் புறப்பாடான வுடனேயே எம்பெருமானார் தமது ஸன்னிதியிலிருந்து ஆழ்வார் ஸன்னிதிக் கெழுந்தருளி ஆழ்வார்களுடன் தவுட்டரை வாசலுக்குநேராக மணல்வெளியில் ஸ்ரீராமன் ஸன்னிதிக்கு எதிர்ப்புறத்தில் பந்தலில் மூவரும் (பராங்குச பரகால யதிவரர்கள்) எழுந்தருளியிருக்க, ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் ஸேவிப்பதும், பெருமாள் எழுந்தருளும்போது ஆழ்வார் எதிர்நோக்கி விரைந்தெழுந்தருள்வதும், பெருமாள் ஒய்யார நடையுடன் ஆழ்வார் ☼வாரிக்கொண்டுன்னை விழுங்குவன்☼ என்றதும், பெருமாள் *தானென்னை முற்றப்பருகினன்☼ என்னும்படி யிருந்ததும் ப்ரத்யபிஜ்ஞை கொள்ளலாம்படியே யிருக்கும். பிறகு ஸ்ரீரங்கராஜஸ்தவ சாத்துமுறை ☼குணதுங்கதயா தவ ரங்கபதே☼ ☼த்வம் மீநபாநீயநயேந☼ இரண்டு ச்லோகங்களையும் சாற்றி ☼ஸ்ரீ பராசரபட்டார்ய:☼ தனியனும் ஸேவித்தானபிறகு பெருமாள் கனவேகமாகத் திருப்புவது ☼பகவ

நஸ் த்வரயை நம:” என்ற பட்டர் ஸ்ரீஸூக்தியை நினைப்பூட்டும். நாடோறும் இதுவே க்ரமம். பிறகு ஆழ்வார்கள் மரியாதை. அந்தந்த நாளில் திருவாய்மொழியில் எந்த பத்து ஸேவிக்க ப்ராப்தமோ, அதில் முதற்பாட்டு ஆழ்வார் திருமுன்பே அரையர் தொடங்கி ஆழ்வாரைப் பெருமாள் பக்கலிலே எழுந்தருளப் பண்ணுவதும் படியேத்தமும் திருவந்திக்காப்பும் திருமாமணி மண்டபம் ஆஸ்தானம் சேவதும் நித்யக்ரமம்.

7. ஏழாந்திருநாளன்று ஆழ்வார்க்கு நாச்சியார் திருக்கோலம். [*கங்குலும் பகலும் பதிகத்தில் ஆழ்வார் நாயகீஸமாதியிலிருந்ததுபற்றி.] அந்தத் திருக்கோலத்துடன் கொட்டகையில். அன்று ஆழ்வானருளிச்செய்த ஸ்ரீஸ்தவமும் பட்டரருளிச்செய்த ஸ்ரீ குணரத்னகோசமும் ஸேவிப்பது விசேஷம். ஸ்ரீரங்கராஜஸ்தவம் பூர்வசதகம் சாத்தாகும். பெருமாள் எழுந்தருளி (நாச்சியாரான) ஆழ்வாரைக் கண்டு மோஹித்து, கொட்டகை யுகஸமை எல்லாம் ஆனபின்பு ஆஸ்தானத்துக்கு எழுந்தருள்வதற்குமுன்பு கைத்தலஸேவை. ஆழ்வார், எதிரே தோளில் எழுந்தருளியிருப்பர். அரையர் (ஏழாம்பத்து. முதல் திருவாய்மொழி) *உண்ணிலாவிய பத்துப் பாட்டுட் ஸேவிக்கபின்பு கைத்தலஸேவை. அப்போது *கங்குலும் பகலும் ஸேவிக்கையில் *இவள் திறத்தென் செய்கின்றாயே?” என்று கேட்பது உயிரை யுருக்கியுண்ணுமென்னும்படியிருக்கும். “ கோயில் திருவாசலிலே முறைகெட்ட கேள்வியாக்கி ” என்ற ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தியை ரஸிகர்கள் நினைத்து உருகுவார்கள். பின்பு ராத்ரி *கங்குலும் பகலும் அபிநயம் வியாக்கியானம. *அந்திப்போதவுணனுடலிடந்தானே ” என்கிறவளவிலே ஹிரண்யவதம் வியாக்கியானம் அபிநயம். பின்பு அரையர் திருக்கையால் தீர்த்தம் ஸ்ரீ சடகோபன் ஸாதித்தல். பின்பு (விட்டவிடம்தொடங்கி) *அலைகடல் கடைந்தவாரமுதே தொடங்கி ஏழாம்பத்தை ஸேவித்து முடிப்பது. திருப்பாவாடை வெள்ளிச்சம்பா கோஷ்டி, புறப்பாடு. ஏகாந்தஸேவை இவை யதாக்ரமம்.

8. எட்டாந்திருநாள் ஜாயவிஜயர்களுக்கு முன்பாக குதிரை நம்பிரான்மேல் வீற்றிருக்கும் நிலை கண்ணுள் நின்றகலாததொன்று. வேகவிண்ணப்பம். அங்கே தீர்த்த கோஷ்டி. திருவாசல் திறப்பதில்லையென்று. மணல் வெளியில் திருவேடுபறி, *வாடினேன் வாடி தொடங்கித் திருமங்கையாழ்வாருடன் திருமாமணி மண்டபம் சேர்தல். இரவு பத்து மணிக்கு *நெடுமாற்கடிமை அபிநய வியாக்கியானம.

10. பத்தாந்திருநாள் மாலை மூன்று மணிக்கு புறப்பாடு. திருவாசல்திறந்து சந்திர புஷ்கரிணியில் தீர்த்தவாரி (ஸ்ரீ சடகோபனுக்கு). அதற்குமுன் காலையிலேயே ஆழ்வார்க்கு அலங்காரத் திருமஞ்சனம். திருத்துழாய் வனையம் திருமாலை பன்னிரு திருமண்காப்புடன் திருவடி தொழ ஸித்தமாக *ஏஹி பச்ய சரீராணியென்று விரஹம் தின்ற வுடம்பைக் காட்டுகிறரென்னும்படி திகழ்வதானது *மரங்களுமிரங்கும் வகையிலே உருக்கி யுண்டிடும். அக்கோலத்துடன் ஸ்ரீரங்கராஜஸ்தவ ஸேவை. குணதுங்கதயா சாத்துமுறையாகி திருமாமணி மண்டபம் ஆஸ்தானம். ராத்திரி பெருமாளுக்கு அசீதி கலசத் திருமஞ்சனம். பின்பு அலங்காரம் திருப்பணியாரம் பன்னீராயிரம் அமுதுசெய்து; அரையர் எழுந்தருளி

*தாளநாமரை வியாக்கியானம் பத்தாம்பத்து ஸேவை ☆சூழ்விசும்பணி முகில் வரைக்கும். திருவடிதொழ எழுந்தருளும்போது ☆சூழ்விசும்பும், திருவடி தொழும்போது ☆முனியே நான்முகனும் அரையர் ஸேவிப்பது. ☆முனியே நான் முகன் ஒவ்வொரு பாட்டையும் இருமுறை ஸேவிப்பது. அது தலைக்கட்டுமள வும் ஆழ்வார் பெருமாள் திருவடியிலே வேரற்ற மரம் போலே கிடப்பதும் திருத் துழாய் பணிமாறித் திருமேனியை மறைப்பதுமான வைகரீ மரங்கள்போல் வலியநெஞ்சினரையும் இரும்புபோல் வலிய நெஞ்சினரையும் இறையிறை யுருகச் செய்யும்.

பகற்பத்திற்போல இராப்பத்திலும் ஆழ்வார்கள் திரும்பி யெழுந்தருளுகை யில் ஸ்தோத்ரபாட கோஷ்டியும் நம்மாழ்வார் ஸன்னிதி வாசலில் பஹுமான மும் எம்பெருமானுர் ஸன்னிதியில் சாத்துமுறை கோஷ்டியும் குறையற நடை பெறும். இந்த க்ரமங்களை ஆதிகாலத்தில் ஏற்பாடுபண்ணி யருளின ஆசாரியர் களின் திருவுள்ள வைசால்யத்தையும், இன்ன இன்னபடி அமைக்கவேணு மென்ற தோற்றங்களையும் நெஞ்சால் நினைக்கவும் அதிகாரிகளில்லை. திருமழிசைப் பிரான் ☆என்மதிக்கு விண்ணெல்லாமுண்டோ விலை☆ என்று பேசிக்கொண்டார். அந்த திவ்ய ஸ்ரீஸூக்திகள் இங்ஙனே நறுமணங் கமழும்படி செய்துவைத்த மஹாசாரியர்களின் மதிக்கு மண்ணும் விண்ணுமெல்லாம் [உபயவிபூதியும்] விலை போராதே. பத்தாநாள் திருவடிதொழுத உத்ஸவம் தலைக்கட்டிப் பெருமாள் மூலஸ்தானம் சேர்வது மறுநாள் பிற்பகலிலாகும். அமுதனர் திருவம்சஸ்தர் களின் மிராசாகும் இயற்பா ஸேவை. ஆனல் அவர்களுடைய ச்ரத்தாலோபத் தாலே அரையர்களே இயற்பாவையும் ஸேவித்து வருகிருர்கள் சில காலமாக. அது அன்றிரவுதான் ஆஸ்தானத்திலே நடைபெற்று மறுநாள் தீர்த்த விநியோக கோஷ்டியாகும். அன்றுதொடங்கியே ஸ்ரீரங்கநாச்சியார் ஸன்னிதியில் ஐந்துநாள் பகற்பத்தும் ஐந்துநாள் இராப்பத்தும் நடைபெறும். அதில் தொடக்கமெல்லாம் அரையர்களுடையது. ஸேவிப்பது அத்யாபகர்களுடையது. ... ... ☆

☆ ஸ்ரீமந்! ஸ்ரீரங்கச்ரியமநுபத்ரவாம் அநுதிநம் ஸம்வர்த்தய. ☆

# அத்யயனேத்ஸவமும் - அடியேனும்

*(ப்ர. அ.)*

கோயில் திருவத்யயனேத்ஸவ வைபவத்தை அடியேன் எத்தனை தடவை ஸேவித்திருக்கிறேனென்பதைப்பற்றியும், மற்றும் அவ்விடத்து அநுபவங்களைப்பற்றி யும் இங்குச் சிறிதுவிஜ்ஞாபிக்க விரும்புகிறேன். இந்தவிஜ்ஞாபனத்தை ஒருபேரின்ப வெள்ளமாகக் கருதுகின்றேன். முதன்முதலாகப் பதினருவது பிராயத்தில் இம் மஹோத்ஸவத்தை ஸேவிக்கத் திருவரங்கம் பெரியகோயில் விடை கொண்டேன். அடியேனுடைய (பூர்வாச்ரம) மாதாமஹரும் ஷஷ்டி ஜீயர்ஸ்வாமியென்று ப்ரஸித் தருமான ஸ்ரீமத்பரமஹம்ஸ. அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி அப்போது அவ்விடத்தில் எழுந்தருளியிருந்தபடியால் அப்போது அங்கு அடியேன் இனிது

வாழ்வதற்கு ஸௌகரியமிருந்தது. அப்போது அடியேனுக்கு **ஜீயர் பேரன்** என்றே வ்யபதேசம். சிலர் 'தங்கக்காப்பு அண்ணா' என்று கூறுவர்கள். அந்த மார்கழி மாதத்திற்கு முந்தின புரட்டாசி மாதத்தில் திருவல்லிக்கேணி வேதவேதாந்த வர்த்தினீ பரிஷத்தில் நாலாயிர திவ்யப்ரபந்தத்தை வியாக்கியானத்தோடுங்கூட ஸூர்க்கத்திப் பரீக்ஷைகொடுத்திருந்தேன். [ஸூர்க்கத்திப் பரீக்ஷையாவது—"பரீக்ஷை பண்ணும்போது ஸூர்க்கத்தியைத் தீட்டி எதிரேவைத்திட்டுப் பரீக்ஷியுங்கள்; விடையில் ஒரு தப்புதப்பினாலும் கத்தியினால் எனது நாக்கை யறுத்திடுங்கள்" என்று சபதமிட்டுப் பரீக்ஷைகொடுப்பதாம். அப்படி நான் சபதமிட்டேனேயொழிய, கத்தியை யாரும் கொணரவுமில்லை, தீட்டிவைக்கவுமில்லை. நான் சொன்ன சொல்லிலிருந்து ஸூர்க்கத்திப் பரீக்ஷையென்று ஒரு ப்ரஸித்தி தென்னாடுமுழுவதும் பரவியிருந்தது.] (அந்த நிகழ்ச்சிக்குஅடுத்தபடியாக) அடியேன் திருவத்யயனோத்ஸவத்திற்குக் கோயில் வந்திருந்தபடியால் பலபல பெரியார்களின் திருவருளுக்குப் பாத்திரமாகநேர்ந்தது. அக்காலத்தில் திருவத்யயனோத்ஸவத்திற்கு இதர திவ்யதேசங்களிலிருந்து மெழுந்தருளும் ஸ்வாமிகள் எண்ணிறந்தவர்களா யிருப்பர்கள். அந்த ஸ்வாமிகள் பலருடையவும் பரமகிருபை அப்போது அடியேனுக்கு எளிதாக ப்ராப்தமாயிற்று. அந்தநாளை நினைக்கும்போது *காலுமெழா கண்ணநீரும் நில்லா உடல் சோர்ந்து நடுங்கிக் குரல்மேலுமெழா மயிர்கூச்சுமறா* என்னுமபடியான நிலைமை யுண்டாகின்றது. இப்போது அந்நிலையில் நின்றே இஃதெழுதுகின்றேன்.

அப்போது அரையர்கள் மூவர்மட்டுமே இருந்தார்கள். இப்போது பெரிய அரையர் என்று வழங்கப்பெறும் ஸ்ரீமதுபயவே. சடகோபாசாரியர்ஸ்வாமியின் மாதாமஹரான (சீனு ஸ்வாமி) என்கிற அரையர் ஸ்வாமி வெகு ஆச்சரியமாக ஸேவிப்பர். அவர் அடியேனுடைய மாதாமஹ ஜீயர்ஸ்வாமிக்கு வலக்கை போன்றிருந்தவராதலால் அடியேன்பால் புத்ரவாத்ஸல்யங் கொண்டிருந்தார். அந்த ஸ்வாமி எழுந்தருளி யிருந்தவரையில்—ஏறக்குறைய இருபது வருஷகாலம் இடையில் ஒரு வருஷமும் தவறாமல் நியதமாகவே திருவத்யயனோத்ஸவத்திற்குக் கோயில் விடைகொள்வேன். 1931-ம் ஆண்டில் அடியேன் சென்னைத் தொண்டமண்டலம் ஹைஸ்கூலில் உபந்யாஸம் தொடங்கினபிறகு கோயிலுக்கு விடைகொள்வது குறையுற்றது. ஆனாலும், சிலபல வருஷங்களில் கார்த்திகை மாதத்திலேயே பகற்பத்து மஹோத்ஸவம் ப்ராப்தமாகும் அத்தகைய ஸந்தர்ப்பங்களில் இழக்கவே மாட்டேன். மொத்தத்தில் நாற்பது வருஷங்களுக்குக் குறையாமல் திருவரங்கம் பெரிய கோயில் திருவத்யயனோத்ஸவத்தை அநுபவிக்கும் பாக்கியம் பெற்றவனடியேன். சென்றவாண்டிலும் இவ்வாண்டிலும் அந்த பாக்கியத்தை அறவே இழந்த வருத்தம் தலையெடுத்து நிற்பதனால் அந்த வருத்தம் ஒருவாறு சாந்தி பெறுதற்காகவே இக்கட்டுரை எழுதினபடி.

## கோயில் ப்ரஹ்மோத்ஸவாநுபவம்

கோயில் ப்ரஹ்மோத்ஸவங்களில் அநுபவத்தைப்பற்றியும் சிறிது விஜ்ஞாபிக்கிறேன். தை, மாசி, பங்குனி, சித்திரை ஆகிய நான்கு மாதங்களிலும் நான்கு ப்ரஹ்மோத்ஸவங்களல்லவா கோயிலில் நடைபெறுவன. மதுரையில் ஸத்ஸம்ப்ரதாய ஸபை யென்று ஆண்டுதோறும் ஏறக்குறைய முப்பது வருஷகாலம் நடந்து வந்தது. வைகுண்டவாஸிகளான ராவ்ப்ஹதூர். மநீஷிமாந்ய. நரஸிம்ஹய்யங்கார்

ஸ்வாமி, அட்வகேட். S. ஸுந்தரராஜையங்கார் ஸ்வாமி முதலான பெரியார்களின் கட்டளையினால் அவ்விடத்திற்குப் பலவாண்டுகள் சென்றுதிரும்பி வருகையில் ஒரு ஸம்வத்ஸரம் பங்குனியுத்தரத் திருநாள் நேரிட்டபடியால் கோயிலில் இறங்கினேன். ஒருவாரமிருந்து ஸேவித்தேன். அப்போது வேதபாராயண கோஷ்டியில் ஸ்வாமிகள் நிறைய இருந்து அற்புதமாகப் பாராயணம் செய்துவருகிறார்கள். அந்த கோஷ்டியில் அந்வயித்திருந்து உத்ஸவத்தைப் பூர்த்தியாக அநுபவிக்கவேணுமென்று ஆசை கிளர்ந்தது அப்படியே அநுபவித்தேன். ஜீயர்புர மெழுந்தருள்வது, உறையூர் எழுந்தருள்வது, பாண்டமங்கலம் ..என்றிப்படி இரவும்பகலும் விச்சேதமில்லாதவேத பாராயண கோஷ்டியநுபவம் *நினைதோறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்.

அந்த ஸம்வத்ஸரத்தில் அடியேனுக்குத் தோன்றிற்று—ஆண்டுதோறும் இவ்வுத்ஸவத்தை இங்குவந்து திருமுளையிலிருந்தே முற்றூட்டாக அநுபவிக்கவேணுமென்று. அடுத்த ஸம்வத்ஸரத்தில் அடியேனது வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலையில் உபாத்யாய ஸ்வாமி யுட்பட எல்லாருமாக (பதின்மர்) வந்திருந்து பரிபூர்ணாநுபவம் பண்ணினோம். இற்றைக்கு ஐம்பத்திரண்டு வருடமாகிறது. அப்போது அநுபவித்தவர்களில் *தோழியும் நானுமொழிய வையம் துயின்றது* என்னும்படியாக ஒருவருளர்—உபயவேத கண்டீரவரென்று விருதுபெற்ற ஸ்ரீ திருமலை விஞ்சிமூர் சிங்கராசாரியர். மற்றொருவரும் நினைவுக்கு வருகிறார் — ஸ்ரீ உ. வே. கோயில் கந்தாடை அண்ணன் ஐடப்ரோல் ராகவாசாரியர் (சீமாச்சு) என்பவர். தற்காலம் மயிலை ஆதிகேசவப்பெருமாள் ஸன்னிதியில் வேதபாராயண நிரதராயிருப்பவர்.

மேலே குறிப்பிட்ட ஸம்வத்ஸரத்திற்குப் பிறகு ஏழெட்டு ஸம்வத்ஸரகாலம் பங்குனியுத்தரத் திருநாளில் சிலவாண்டுகள், சித்திரைத் திருநாளில் சிலவாண்டுகள் விடைகொண்டிருந்து அடியேன்மட்டும் அநுபவித்தது நாற்பது வருடங்களுக்கு மேற்பட்டாலும் இன்று நேற்று போலவே யுள்ளது. என்னெஞ்சை விட்டகலாத ஓர் அநுபவத்தை விசிஷ்ய விஜ்ஞாபிக்கிறேன். (கோயில்) ப்ரஹ்மோத்ஸவங்களில் நம்பெருமாள் வாஹனமண்டபத்திற்கு எழுந்தருள்வது இரவு இரண்டு மணிக்கும் மூன்று மணிக்குமா யிருக்கும். அப்போதும் வேதபாராயணமுண்டு. அந்த ஸந்தர்ப்பத்தில் ஒன்றிரண்டு பஞ்சாதிதான் க்ரம பாராயணமாகும். அதற்கு எல்லா ஸ்வாமிகளும் இருக்கமாட்டார்கள். ஒருவரிருவர் மட்டுமே சயனித்திருந்து பாராயணம் பண்ணிவிட்டுத் திருக்காவேரி செல்வர். அந்த ஸந்தர்ப்பத்திலும் அடியேன் உறங்கச்செல்லாமல் உடன்கிடப்பேன். அப்போது, நங்கவரம் ஸ்வாமி யென்றிருந்த ஒரு பெரியவர் "காஞ்சீபுரம் ஸ்வாமீ! எங்களுக்குத்தான் தலைவிதி, விழுந்துகிடக்கிறோம்; ஸுகுமாரரான தேவரீர் ஜாகைக்குச் சென்று மெல்லணையில் கண்வளரக்கூடாதா?" என்பார். இப்படி தினந்தோறுஞ் சொல்லுவர். 'கோவில் காக்கிற பாக்யம் உங்களுக்கு மேலாக எனக்குண்டு ஸ்வாமீ!' என்பேன். *உன் கடைத்தலையிருந்துவாழுஞ் சோம்பரையுகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே!* என்கிற பாசுரம் தெரியாதா? என்பேன். இப்போது, இங்ஙனே பழங்கதைகளை யெழுதிப் போதைப் போக்குகிறேன். * சாயலொடுமணிமாமை தளர்ந்தேன் நான் * சங்கம் சரிந்தன சாயிழந்தேன்* என்னும் நிலையில் கிடக்கிறேன். நிற்கிறேன். ... *

## கடிதங்கள்.

**1. ப்ரஹ்மஸ்ரீ E. R. நடராஜ சர்மா, சங்கரமடம் மேலமாம்பலம். 30—12—74.**
(காரியதரிசி—வேதபாராயண சபா.)

இவ்விடத்தில் வேதபாராயண ஸபை ஏற்பட்டுப் பதினன்கு வருஷமாகிறது. தினப்படியாக மாலைவேளைகளில் 10, 12 கனபாடிகள் சேர்ந்து ஒருமணிகாலம் கிருஷ்ண யஜுர்வேதம் க்ரம பாராயணம் செய்துவருகிறார்கள். தவிர, கார்த்திகை மாதம் முதல் தேதியிலிருந்து மண்டல பாராயணம் என்று ஆரம்பித்து தைத்திரீய ஸம்ஹிதையிலுள்ள 44 ப்ரச்னங்களையும் 44 இடங்களில் (அதாவது, விரும்பி யழைக்கும் ஆப்தர்களான வைதிகோத்தமர்களின் பவனங்களில் கனபாடிகள் கோஷ்டியாகச்சென்று பாராயணம் செய்துமுடிப்பது வழக்கமாக நடந்துவருகிறது. இதுவும் இவ்வருஷம் யதாக்ரமமாக நடைபெற்றது.

(29-12-74) பிற்பகல் 3 மணியிலிருந்து மாலை 6-30 வரையில் இச்சபையின் 14வது ஆண்டு பூர்த்தி விழாக் கொண்டாட்டம் மிகச்சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் ஸ்வாமி, ஸ்ரீமான் R. வேங்கடராமன் (முன்னுள் திட்டக்கமிஷன் மெம்பர்) ப்ரஹ்மஸ்ரீ பாலக்ருஷ்ண சாஸ்த்ரிகள் (ஸம்ஸ்க்ருத கல்லூரி முதல்வர்) காலடி ஸுப்ரஹ்மண்ய சாஸ்த்ரிகள், ராமசாமி சர்மாபோன்ற மஹநீயர்கள் போந்திருந்தது குறிப்பிடத்தக்கது. ஸபையின் ஆண்டுவிழாமலரை வெளியிடுமாறு ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமியை வேண்டினோம். ஸ்வாமி ஸ்ரீமான் R. வேங்கடராமன் அவர்களைக்கொண்டு வெளியிடுவித்தார். ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமியின் கட்டுரை ஒவ்வொரு ஆண்டும் விழாமலரை அலங்கரித்து வருவது வழக்கம். இவ்வாண்டில் ஸ்ரீஸ்வாமி அருளிய வியாஸம் மிகப்பெரிதாயிருந்ததால் ஸ்ரீஸ்வாமியே தமது தனி வெளியீடாக அதனைப் பதிப்பித்தார். 'யஜுர்வேத ஸித்தாஞ்ஜநம்' என்கிற அந் நூலைப்பற்றி ஸ்ரீகாலடி கனபாடிகள் மனமுவந்து மொழிந்தவற்றின் ஸாரமாவது:- 'ஸ்ரீகாஞ்சீஸ்வாமிகள் அருளியுள்ள ஸித்தாஞ்ஜநம் வித்வதௌஷதம் என்று போற்றத்தக்கது. வேதக் கடலைக் கடைந்து இவ்வமுதத்தினை யளித்துள்ளார் ஸ்ரீஸ்வாமி. ஸ்வாமியின் ஆராய்ச்சித்திறமைக்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு' என்பதாம். இதன் பின் ஸ்ரீ ஸ்வாமி 'யஜ்ஞேந தாநேந' என்கிற ச்ருதிவாக்யத்தை விவரித்து அரிய பல வேதக்கருத்துக்களை வெளியிட்டருளி அனைவரையும் மகிழ்வித்தார். அவ்வுபந்யாஸம் தென்மொழி வடமொழியாகிய இரண்டு வேதத்தின் நுண்பொருளும் கலந்து அத்புதமென்னத் திகழ்ந்தது.

இப்படிக்கு, **நடராஜ சர்மா.**

## — 2 —

**கும்பகோணம் ப்ரஹ்மஸ்ரீ V. R. லக்ஷ்மீகாந்த சர்மா,**
*(Chief Physician, The Lalitha Pharmacy. 25-12-74)*

அநேக கோடி ஸாஷ்டாங்க நமஸ்காரங்கள். அவ்விடம் (23-12-74) அனுப்பின கடிதமும் யஜுர்வேத ஸித்தாஞ்ஜநமும் கிடைத்தன. இந்தப்பிரசுரம் தனி வெளியீடாக வருகிறதா அல்லது ஸ்ரீராமாநுஜனில் வருகிறதா? என்பதை அறிய ஆவலுள்ளவனாய் இருக்கிறேன். இந்த வெளியீடு மிகவும் ஸ்வாரஸ்யமானதுடன் ஆச்சர்யமானதுங்கூட. இது வேறெவராலும் மனத்தினாலும் சிந்தித்துப் பார்க்கவும்

முடியாத விஷயம். இந்தப் பிரசுரம் பூர்ணமாகும் வரை எனக்குத் தொடர்ந்து அனுப்பிவைக்க வேண்டுகிறேன்.

அனந்த கோடி நமஸ்காரங்கள். V. R. S.

— 3 —

ஸ்ரீமதுபயவே, ப்ரவசந பஞ்சாநந, உபந்யாஸ பாஸ்கர,
ஸலக்ஷண கனபாடி
K. V. ஸந்தாநகோபாலாசாரியர், Hyderabad—28-12-74.

ஸ்ரீமதித்யாதி ஸ்ரீஸ்வாமி ஸன்னிதியில் அடியேன் ஸந்தானகோபாலதாஸன் அனந்தமானதெண்டன் ஸமர்ப்பித்துச்செய்யும் விண்ணப்பம். அடியேன் சிலமாதங்களாக ஸ்வாமி ஸன்னிதிக்கு விஜ்ஞாபனம் எழுதிக் கொள்ளாத பிழையை க்ஷமித்தருளவேணும். தற்காலம் ஹைதராபாதில் இருந்து வருகிறேன். இவ்விடம் திருப்பாவை ப்ரவசனம் மிகப் பெரிய கோஷ்டியாக நடந்துவருகிறது. ஸெகிந்தராபாத் ஸ்ரீலக்ஷ்மீநாராயணன் ஸன்னிதி அதிகாரியான ஸ்ரீ உ.வே. தேவநாதசார்யஸ்வாமி மூலமாக தேவரீருடைய யஜுர்வேத ஸித்தாஞ்ஜந ஸ்ரீகோசம் கிடைக்கப் பெற்றுப் பூர்த்தியாக ஸேவித்துக் கொண்டேன். இதுவரை இந்த ப்ரஹர்ஷியும் செய்யாத உத்தமமான இந்த உபகாரம் வைதிகவுலகுக்கு ஸ்வாமி மூலம் கிடைத்திருக்கிறது. சாஸ்த்ர பரிசயமும் உள்ள ஸலக்ஷண கனபாடிகளனைவராலும் மிகமிக ச்லாகிக்கத் தகுந்த ஸ்ரீகோசமிது. உண்மையில் வைதிகர்கள் அனைவருக்குமே மஹோபகாரகம் இது. ப்ராதிசாக்ய சிக்ஷாதிக்ரந்த காரர்கள் கூட ஏதோ வேறுவிதத்திலீடுபட்டு ஒருவிதமான விவரணம் செய்தார்களே தவிர பரமஸூக்ஷ்மமாக இந்த வழியில் உபகாரம் இதுவரை ஒருவரும் செய்ததில்லை. ஓரெழுத்துப் பதங்கள், ஈரெழுத்துப் பதங்கள், மூவெழுத்துப்பதங்கள்........... இப்படி வகுப்பு வாரியாகப் பதங்களைத் தொகுத்தெடுத்து ஸ்வரபேதங்களையும் அதற்கானகாரணங்களையும்............ இப்படிப் பல ஸூக்ஷ்ம விசாரங்களை முன்புள்ள ரிஷிகள் யாரும் செய்யவில்லை. இது ஓர் அஸாதாரணமான அதிமாநுஷ விவரணம். இதற்குக் கைம்மாறு வேதபுருஷனாலேயே செய்யமுடியாது. கைம்மாறு மாயனும் காணகில்லான். வேதபுருஷனுக்கும் அகோசரமான இவ்விஷயத்தில், அடியேன்போன்றவைதிகர்கள் ப்ரணாமாஞ்ஜலியைத்தான் ஸமர்ப்பித்து நிற்கமுடியும். இதை ச்லாகிக்கக்கூட அடியோங்கள் அநர்ஹர்கள். இப்படிக்கு, கமலாபுரம் ஸந்தான கோபாலாசார்ய தாஸன்.

— 4 —

ப்ரஹ்மஸ்ரீ. R. ராமசந்த்ர சர்மா,
மயிலை 2—1—75.

தேவரீர் அண்ணா அவர்களுக்கு மயிலாப்பூர் தாஸன் ராமசந்த்ரன் அநந்த கோடி நமஸ்காரம். இன்று 'வைதிக மனோஹரா' வந்தது. அத்தோடு 'யஜுர் வேத ஸித்தாஞ்ஜநமும் கிடைத்தது. தேவரீருடைய சாச்வத கீர்த்திக்கு இந்த ஸ்வரலக்ஷணசிக்ஷா க்ரந்தம் ஒன்றே போதும். அதிமாநுஷமான ஸாஹஸம்.

இப்படிக்கு, ராமசந்திரன்.

4

# ஸ்ரீபெரும்பூதூரில் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம்

ஸ்ரீமதுபயவே. மணவாள. திருவேங்கடாசாரியர் ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூரில் ப்ரதிஷ்டிதராயிருப்பவர். அவ்விடத்தில் உபயவேத கோஷ்டீ நிர்வாஹகராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் மணவாள ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமியின் மூத்த திருக்குமாரரான இந்தத் திருவேங்கடாசாரியர்க்கு நேற்றைக் கார்த்திகை மாதத்தில் பூராட நக்ஷத்திரத்தில் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம் வெகு சிறப்பாக நடைபெற்றது. கார்த்திகை மாதத்தில் இரண்டு பூர்வாஷாடா நக்ஷத்திரங்கள் ப்ராப்தமாயின. இரண்டாவது நக்ஷத்திரம் திருக்கார்த்திகைக்குப் பின்பு அநத்யனத்தில் வந்தபடியால் முந்தின நக்ஷத்திரத்தில் அத்யாபகஸ்வாமிகள் பதின்மரைக்கொண்டு அருளிச்செயல் நாலாயிரமும் ஸேவித்து சாத்துமுறை செய்யப்பட்டது. பிந்தின நக்ஷத்திரத்தில் (கார்த்திகை முடிவு தேதியில்) யஜுர்வேதம் அசீதியும் ஸ்ரீராமாயணாதிகளும் பாராயணம்செய்து முடிக்கப்பட்டு மாங்கல்யதாரண மஹோத்ஸவம் யதாக்ரமமாக நடந்தேறியது. இவருடைய வைதிக ச்ரத்தை அனைவராலும் பாராட்டப்பட்டது. "பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு" ...

# பெரியாரின் பரமபத ப்ராப்தி

திருவல்லிக்கேணிக்குத் திலகமாக எழுந்தருளியிருந்தவரும் உபயவேதாந்த ப்ரவீணருமான ஸ்ரீமான் C. S. பார்த்தஸாரதி ஐயங்கார்ஸ்வாமி (B. A., B. L.,) சில நாட்கள்மட்டுமே திருமேனிப் பாங்கில்லாமலிருந்து (30–12–74) திருநாட்டுக்கெழுந்தருளினார். இந்த ஸ்வாமி லாஹோரிலும், டில்லிமாநகரிலும் உயர்பதவிகளில் வாழ்ந்து விச்ராந்திபெற்றுத் திருவல்லிக்கேணி வந்து சேர்ந்தபிறகு ஸ்ரீ பார்த்தஸாரதி யெம்பெருமான் ஸந்நிதியில் ஐந்து ஸம்வத்ஸர காலம் தர்மகர்த்ரு பதவியை அலங்கரித்திருந்து அனைவரும் கொண்டாடும்படியாகக் கைங்கர்ய நிர்வாஹம் செய்தருளினவர். உபயவேதாந்தங்களையும் வரியடைவே கற்றவர்; பரம ஆஸ்திகர். ... ... ... ... ...

# யஜுர்வேத ஸித்தாஞ்சனம்.

நம் பத்ராதிப ஸ்வாமி பலவருஷங்களுக்கு முன்பு வேதாத்யயந ஸர்வஸ்வமென்றும், பதபாட பரித்ராணமென்றும் பத்தெட்டு நூல்களை ஏற்கனவே வெளியிட்டிருக்கிறாரென்பது உலகப் பிரஸித்தம். ஸமீப காலத்தில் யஜுர்வேத ஸித்தாஞ்ஜநமென்கிற க்ரந்தத்தை இயற்றி வெளியிடத் தொடங்கியிருக்கிறார். இதில் விரிவான அவதரணிகையும் மூன்று ஆஹ்நிகங்களும் வெளிவந்திருக்கின்றன. க்ரந்த லிபி கலந்த தமிழ் லிபியிலேயே வைதிகர்கள் அனைவரும் எளிதாக அறியலாம்படி இயற்றப்பட்டுள்ளது. இந்த க்ரந்தம் இப்போது முடிவுபெறவில்லை. பத்து ஆஹ்நிகங்கள் வரையில் தொடர்ந்து செல்லக்கூடும். பெற விருப்பமுள்ளவர்கள் 25 N. P. ஸ்டாம்பு மட்டும் அனுப்பிப் பெறலாம்.

இங்ஙனம்,

**தி. அ. அனந்தாழ்வான்.**

# ஸ்ரீ வைஷ்ணவ மஹநீயரின் பரமபத ப்ராப்தி

(A. ராமாநுஜாசாரி, B.A., 60, பெருமாள் கோயில் தெரு, சென்னை-15.)



'வாஸுதேவஸ்ஸர்வம்' என்றும் 'உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்' என்றும் பேசப்படுகிற மனப்பக்குவம் படைத்தவரும், ஸ்ரீவைஷ்ணவ உலகில் பிரக்யாதிபெற்றவருமான ஸ்ரீமான் உ. வே. C. S. பார்த்தசாரதி அய்யங்கார் ஸ்வாமி, B.A., B.L., இந்த தனுர் மாதம் 'எல்லே இளங்கிளியே' யன்றைய தினம் (30—12—74) தமது 76-வது வயதில் ஆசாரியன் திருவடியடைந்தார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

பவானி தாலுக்காவைச் சேர்ந்த இப்பாகவதோத்தமர் ஆங்கிலக் கல்வியுடன் தமிழ் சமஸ்கிருதம் இரண்டிலும் பாண்டித்யம் பெற்று ஞானமனுட்டானமிவை நன்றாகவே யுடையரான ஆசார்யகளிடம் சம்பிரதாய கிரந்த காலக்ஷேபங்களை அடைவேகேட்டு ஜ்ஞான நிதியாக விளங்கினர். 1928-ம் ஆண்டு வடதிசைக்கண்ணுள்ள லாஹூரில் அப்போதைய ஐக்கிய பாரதத்தின் பஞ்சாப் கவர்மெண்ட் சர்விஸில் சேர்ந்து 20 வருஷங்கள் பணியாற்றியபின் 1948-ல் மத்ய கவர்மென்ட்டுக்கு மாற்றப்பட்டு தலைநகரான டெல்லிக்கு எழுந்தருளி உணவு மந்தராலயத்தில் 1958-வரை பணியாற்றினர். லாஹூரிலும் டெல்லியிலும் ஸ்வாமி ஓய்வு நேரங்களிலும் விடுமுறை நாட்களிலும் ராமானு பாஷ்யபரமான கீதோபந்யாஸங்கள் நூற்றுக் கணக்காகச் செய்து ஆயிரக்கணக்கான ஆஸ்திகப் பெருமக்களைப் பக்தி பரவசராக்கின பெருமை பெற்றார். மேலும் பகவத் விஷய, ஸ்ரீபாஷ்ய ரகஸ்ய கிரந்த காலட்சேபங்கள் பல செய்து டெல்லி வாழ் ஸ்ரீவைஷ்ணவர்களை உஜ்ஜீவிக்கச் செய்து அவர்களின் கிருதக்ஞதைக்குப் பாத்திரரானார். தவிர இவருடைய திருமாளிகையில் பல வருஷங்கள் எம்பெருமானார், மணவாள மாமுனிகள், மற்ற ஆழ்வார் ஆசாரியர்களின் திருநக்ஷத்திரோத்ஸவ பரிபாலனத்தைத் திவ்வியப்பிரபந்த சேவை சாத்துமுறை, உபந்யாஸங்களுடன் டில்லி ஸ்ரீவைஷ்ணவ சபையின் சார்பில் நடத்திவந்தார். இவ்வுத்ஸவங்களுக்கு இவர்செய்த உபகாரம் சொல்லத்திறமில்லை.

1951 மார்ச்சுமாதம் ஸ்ரீமான் உ. வே. காஞ்சி பிரதிவாதிபயங்கரம் அண்ணஸ்வாமியின் சஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம் சென்னையில் போல் 'ந பூதோ ந

பவிஷ்யதி' என்று டெல்லி நகரிலும் ஒரு வாரம் கொண்டாடப்பட்டது. ஸ்வாமியை அவ்விடத்துக்கு அத்யாபக வேதப்பாராயண கோஷ்டிகளுடன் எழுந்தருளப்பண்ணி மாபெரும் சபைகளைக் கூட்டி டெல்லி வாஸிகள் கௌரவித்ததை நாடு நகரமும் நன்கறியும். இதற்கான ஏற்பாடுகளை (late) Dr. Sir K. S. கிருஷ்ணனைத் தலைவராகக் கொண்ட ஒரு கமிட்டி நிர்வஹித்தது. அந்தக் கமிட்டியில் நமது ஸ்ரீ C. S. பார்த்தசாரதி அய்யங்கார் ஸ்வாமி பொக்கிஷதாரராக இருந்து இரவு பகலாக, பக்தி ச்ரத்தையுடன் ஆற்றிய சேவையை உலகம் என்றும் மறக்க முடியாது.

1958-ல் மத்திய சர்க்கார் சர்விஸிலிருந்து ஓய்வு பெற்று இந்த ஸ்வாமி சென்னை திருவல்லிக்கேணியை வாசஸ்தலமாகக் கொண்டார். இங்கு எழுந்தருளிய சில மாதங்களிலேயே ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தான தர்மகர்த்தாவாக நியமிக்கப்பட்டுக் கீதாசாரியனுக்கு ஐந்து ஸம்வத்ஸரம் கைங்கர்யம் செய்யும் பெரும்பேறு ப்ராப்தமாகப் பெற்றார்.

1970 நவம்பரில் மணவாள மாமுனிகளின் ஆறாவது நூற்றாண்டு பூர்த்தி விழா தேசமெங்கும் கொண்டாடப்பட்டது பிரஸித்தம். அச்சமயம் தலைநகர் டெல்லியில் இவ்வரிய சரித்திரபூர்வமான சம்பவத்தின் ஞாபகார்த்தமாக 'ஸ்ரீராம மந்திர்' என்ற சக்கிரவர்த்தித் திருமகன் சன்னிதியில், ஸ்ரீபெரும்பூதூரில் கோயில் கொண்டிருக்கும் 'தானுகந்த திருமேனி'யைப் போலவே எம்பெருமானாருடைய திவ்யமங்கள விக்ரஹப் பிரதிஷ்டை செய்யப்பட்டு சம்ப்ரோக்ஷணம் நடந்தது. இக் கைங்கர்யத்தில் சென்னை நகரப் பிரதிநிதியாகவிருந்து ஸ்ரீ C. S. பார்த்தசாரதி அய்யங்கார் ஆற்றிய சேவையை 'ஸ்ரீராம மந்திர்' ஸ்தலாசார்யரான பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ ஸ்ரீமந் நாராயணராமாநுஜ ஜீயர் ஸ்வாமி மிகவும் பாராட்டி மங்களாசாஸனம் செய்து கௌரவித்தார்.

சுமார் இரண்டு வருஷங்களுக்கு முன், நூற்றாண்டுவிழா கொண்டாடின திருவல்லிக்கேணி ஸ்ரீவேத வேதாந்த வர்த்தனி சபாவின் பிரஸிடெண்ட் பதவியைக் கடைசிவரை ஏற்று சபையை அலங்கரித்து ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்திற்கு ஸ்ரீபார்த்தசாரதி அய்யங்கார் ஸ்வாமி செய்த சேவை வாசாமகோசரம். இவர் திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருந்த இந்த 15-16 வருஷங்களில் ஒரு நிமிஷமும் வீணாக்காமல் சத்விஷயங்களிலேயே போது போக்கினார் என்றால் அது அதிசயோக்தியன்று. அட்வகேட் ஸ்ரீசம்பகேசய்யங்கார் போன்ற மேதாவிகளுடன் சம்பிரதாய கிரந்த காலட்சேபங்களில் ஈடுபட்டிருந்து 'முன்னவாரம் நம் குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம், முழுது நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்' என்று மாமுனிகள் அருளிச்செய்தபடி பெருமிதம் கொண்டு வாழ்நாளைப் போக்கின பாக்கியம் பெற்றார் இப் பெரியார்.

ஸ்ரீ பார்த்தசாரதி அய்யங்காருடைய ஆத்ம குணங்களையும் பாண்டித்யத்தையும் பல வருஷங்களுக்கு முன்னமே கண்டறிந்த நம் காஞ்சீ ஸ்ரீமத் உ. வே. அண்ணங்கராச்சார்ய ஸ்வாமி 1958-ல் தாம் பிரசுரித்த "வைதிக லௌகிக மஹநீய மண்டலி" என்ற புகைப்படப்புத்தகத்தில் ஸ்ரீ அய்யங்காருடைய திருஉருவப் படத்திற்கும் இடமளித்திருந்தது ஆச்சரியமில்லையன்றோ! இப்படிப் பலவிதத்திலும் பெருமைவாய்ந்த இந்த ஸ்ரீ வைஷ்ணவ திலகத்தின் மறைவால் நம் சம்பிரதாயத்திற்கு ஈடு செய்ய முடியாத நஷ்டம் என்பது யாவரும் ஒரு குரலாகச் சொல்லும் ஓல மொழியாகும்.

# ஸ்ரீமத் R. V. சேஷாத்ரி ஸ்வாமியின் பாராட்டு

[சென்னை உப்பட்டூர் ஆழ்வார் செட்டியார் சாரிடி ஹாலில் நடந்து வந்த ஸ்ரீ ஸ்வாமியின் திருப்பாவை யுபந்யாஸ கோஷ்டியில் 8–1–75 தேதி மாலை சென்னை அட்வகேட் ஸ்ரீ உ. வே. R. V. சேஷாத்ரி ஸ்வாமிகள் ஸ்ரீ ஸ்வாமியின் உபந்யாஸ வைபவத்தைப்பற்றி அரைமணிகாலம் உபந்ய ஸித்து, அதை அப்படியே தமது கையாலும் எழுதித்தந்த கட்டுரை வருமாறு;— (அவகாசக் குறைவினால் சில பாராக்களைப் பிரசுரிக்க இயலாமைக்குப் பொறுப்பது). தி அ. அனந்தாழ்வான்.]

## 8-1-75ஆம் தேதி அடியேன் (R. V. சேஷாத்ரி) நிகழ்த்திய உரை

ஸ்ரீ ஸ்வாமி திருவடிகளில் தலைதாழ்த்தி, பக்தஜனங்களனைவர்க்கும் பிரணாமங்களைத் தெரிவித்துக்கொண்டு சிறிது விஜ்ஞாபிக்கிறேன். நேற்றுதான் ஆரம்பிக்கப்பட்டதுபோலுள்ள திருப்பாவை காலக்ஷேபம் முடியுந் தருவாயில் இருக்கிறது. 24 பாசுரங்கள் முடிந்துவிட்டன. இவ்வருஷம் நம் ஸ்வாமி மிகவும் திருமேனி சிரமப்பட்டுக்கொண்டு உபந்யாஸம் செய்தருளி வருகிறார். ஸ்வாமிக்கு உடல்நிலை பாங்கில்லை. அதிகநேரம் பேசமுடியாத நிலை இருந்தும் சிரமம்பாராமல் வழக்கம்போல் ஒன்றையும் விட்டுவிடாமலும், அதிகப்படியாகவும் உபந்யாஸம் செய்துவருகிறார். நாமெல்லாம் ஸ்வாமிக்கு மிகமிகக் கடமைப்பட்டுள்ளோம். இதற்குமுன் ஸ்வாமிக்குக் கடமைப்பட்டதைக் காட்டிலும் இவ்வருஷம் நூறு மடங்கு அதிகமாகவே கடமைப்பட்டுள்ளோம். மிக்க சிரமத்திலும் ஸ்வாமி நம்மைத் தமது உபந்யாஸங்களினால் தினமும் பரவசமடையச்செய்து வருகிறார். வழக்கம்போல் ஒவ்வொரு பாசுரத்தையும் பரக்க உபந்யஸித்துவந்தபோதிலும் "மாயனை மன்னு" "கீழ்வானம்" தூமணி மாடத்து" "உந்து மதகளிற்றன்' "முப்பத்துமூவர்" முதலிய பாசுரங்களின் விவரணம் இவ்வருஷம் அத்யத்புதமாக அமைந்தது.

"மாயனை மன்னு" பாசுரத்தை சுமார் இரண்டேகால்மணிநேரம் வ்யாக்யானித்தருளினர். "முப்பத்து மூவர்" பாசுர உபந்யாஸத்தன்று ஸ்வாமி செய்யக்கூடாத பெரிய ஸாஹஸத்தையே செய்துவிட்டார். அன்று மாம்பலத்தில் நடந்த ஸதஸ்ஸில் ஒருமணிநேரம் பேசிவிட்டு, பிறகு நுங்கம்பாக்கத்தில் நடந்த திருப்பாவை ஸதஸ்ஸிலும் ஒருமணிநேரம் உபந்யஸித்துவிட்டு மாலையில் வழக்கம்போல் இங்கேயும் உபந்யாஸம் செய்தருளினர். அன்று டில்லி சுப்ரீம் கோர்ட் நீதிபதி கனம் அழகிரிசாமி அவர்களும், சென்னை ஹைகோர்ட் நீதிபதி கனம் ஸேதுராமன் அவர்களும் சபைக்கு விஜயம் செய்திருந்தபடியால் ஸ்வாமிக்கு உத்ஸாஹம் அதிகமாகிக் காலத்தை மறந்தே உபந்யஸித்தருளினர். இவ்விதம் செய்யவேகூடாது. நம்முடைய சரீரம் ப்ராக்ருத சரீரம். வயது அதிகமாக அதிகமாக அதன் சக்தி குறைந்து வருகிறது. ஆகையால் ஆயுர்வேதசாஸ்திரவிதிப்படி சரீரத்தை சக்திக்கு மீறி மாய்த்துக்கொள்ளக்கூடாது. ஸ்வாமி அந்தவிதியை யெல்லாம் புறக்கணித்து

ஆயுர்வேத சாஸ்திரத்தை மீறுவது சிறிதும் தகாது. திருக்கோட்டியூர் நம்பி ஒரு சமயம் எம்பெருமானார் மாதுகரத்தை நிறுத்த நேர்ந்தபோது அவர்க்கு போஜன வஸதி ஏற்பாடுசெய்யத் திருக்கோட்டியூரிலிருந்து ஸ்ரீரங்கத்திற் கெழுந்தருளுகையில், காவிரி மணலில் அவரைத் தெண்டனிட்டு வெகுநேரம்கிடந்த எம்பெருமானாரது திருமேனியில் பரிவுநிரம்பியகிடாம்பியாச்சான், நம்பியைக்கடிந்துபேசித் தமது பரிவை வெளியிட்டாரென்பது பிரசித்தம்; அத்தகைய பரிவு நமக்கெல்லாம் ஸ்வாமியின் திருமேனியில் இருக்கவேண்டும், இருக்கின்றது. அடுத்த வருஷம்முதல் ஸ்வாமி இம்மாதிரி தினந்தோறும் மணிபோவது தெரியாமல் உபந்யாஸம் பண்ணக் கூடாது; பண்ணவும் நாம் விடக்கூடாது. வாரத்திற்கு ஒன்று அல்லது இரண்டு நாள் உபந்யாஸங்கள் ஏதாவது ஒரு விஷயத்தைப்பற்றித் திருப்பாவையில் ஸம்பந்தப்படும்படி செய்தால் திருப்பாவை முழுவதுமே நாளடைவில் உபந்யஸிக்கப்பட்டதாகும். இதெல்லாம் அடியேன் ஸ்வாமிக்கு நினைவூட்டுகிறேன். உபதேசிக்கவில்லை, [அன்பர்களே! இதை நான் பேசும்போது ஸ்ரீ ஸ்வாமி சிரித்துக்கொண்டே ஸாதித்தார்– உபதேசிக்கவும் சிக்ஷிக்கவும் ஹக்கு உண்டு' என்று. அப்போது சபையோர் கரகோஷம் செய்தனர்].

ஸ்ரீ ஸ்வாமி மற்றவர்களைப்போலல்லாமல் இளமையே தொடங்கிக் கடுமையாக உழைத்தவர்; இந்தத் திருமேனியின் அருமை பெருமைகளை யறியாதாரில்லை. ஸ்வாமி ஒருநாளைக்குப் பதினாறுமணிகாலம் எழுதிவரும் வழக்கத்தை இன்றைக்கும் விடவில்லை. அர்ச்சாவதாராநுபவத்தில் குதூஹலமோ அபரிமிதம். பெருமாள் புறப்பாடுகளில் இரவுபகலாக கோஷ்டியைக் காப்பதை இந்தப் பிராயத்திலும் விடவில்லை. ஆஹாரத்தில் விருப்பமே கிடையாது. ஏதோ சில பருக்கைகளைக் கிண்ணியில் வைத்துக்கொடுக்க அமுது செய்வதை முப்பது வருடங்களுக்கு முன்பே நேரில் கண்டிருக்கிறேன். அது கிடக்கட்டும்.

ஸ்ரீ ஸ்வாமி எந்தவிஷயத்தை யெடுத்துக்கொண்டு உபந்யஸித்தாலும் 'இது தான் ஸ்வாமிக்குத் தெரியும்போலும்; இதுதான் ஸ்வாமி கற்றதுபோலும்' என்றே ஒவ்வொருவரும் நினைக்கும்படியாயிருக்கும். திருப்பாவையைப்பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. திருப்பாவை யுபந்யாஸத்திற்குக் காரணபூதரே ஸ்வாமிதான். இதற்கு மார்க்கதர்சிய நம் ஸ்வாமிதான் இதை எல்லா வித்வான்களும் மறுக்காமல் ஒப்புக்கொள்ளுகிறார்கள். நம்ஸ்வாமி திருப்பாவைக்குத் தமிழ்பாஷையிற்போலவே ஸம்ஸ்கிருதம் தெலுங்கு ஹிந்தி ஆகிய பாஷைகளிலும் விரிவாக வியாக்கியானங்களை யெழுதி வெளியிட்டிருக்கிறார். ஸ்வாமி சென்னையில் காலக்ஷேபம் ஆரம்பிப்பதற்கு முன்னமே இப்படி பல வியாக்கியானங்களை வெளியிட்டிருப்பதால் அவை உலகமெல்லாம் பரவி யிருக்கின்றன. அவற்றைக்கண்டும், ஸ்வாமியின் உபந்யாஸங்களை நேரில் கேட்டும் ஆங்காங்குப் பலபேர்கள் திருப்பாவை யுபந்யாஸங்கள் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். இரண்டு நாட்களுக்கு முன்பு வில்லிவாக்கத்தில் ஒரு திருப்பாவை ஸதஸ்ஸு நடந்தது. அதில் அடியேனை அத்யக்ஷனாக உட்காரவைத்துவிட்டபடியால் ஆதியோடந்தமாக இருக்க நேர்ந்தது. பலவித்வான்கள் திருப்பாவைப் பாசுரங்களை விளக்கி உபந்யஸித்தார்கள். முழுவதும் நம் ஸ்வாமி விளக்கியுள்ள விஷயங்களே யென்பதை ஸபையோர்களே பேசிக்கொண்

டார்கள். நம் ஸ்வாமியின் பாணியாகவே விவரித்தார்கள். அதில் வேறு பாணி கிடையாது. அவ்வளவுதூரம் நம் ஸ்வாமியின் உபந்யாஸங்களும் வியாக்கியான நூல்களும் வேரூன்றி யிருக்கின்றனவென்று நான் உண்மையில் ஸந்தோஷமே யடைந்தேன். சில வித்வான்கள் இதைத் தாங்களே வெட்டவெளிச்சமாக ஸபையி லேயே சொல்லுகிறார்கள்; சிலர் தங்கள் பெருமைக்கு பங்கமாகுமோவென்று அசூயையினால் மறைக்கிறார்கள். இது வித்வான்களுக்கு ஸஹஜமே யாகும்.

பல பெரிய ஸங்கீத வித்வான்களின் வழியைப் பின்பற்றிச் சிறிய வித்வான்கள் சங்கீதக் கச்சேரிகள் நடத்துவார்கள். அதை அரியக்குடி பாணி மஹாராஜபுரம் பாணியென்று பெரிய வித்வான்களின் பெயரையிட்டுக் கூறுவர்கள். அதே போல் நம் ஸ்வாமியின் பாணியைக் கைப்பற்றப் பலரும் ஆசைப்படுவது நன்றே.

இந்த இடத்தில் ஸ்வாமியின் பெருமையை ஓரளவு சொல்லவேண்டும். ஸ்வாமி ஒரு (Genius) மாமேதை என்பதில் ஐயமில்லை. ஏராளமான விஷயங்களைக்கற்று மனத்தில் தேக்கிவைத்து வேண்டும்போது விநியோகிப்பது, விஷயங்களை ஆராய்ச்சிசெய்து அபூர்வ ஸ்புரணத்தால் பிறர் திகைக்கும்படி எடுத்துக்கூறுவது ஆகிய இவ்விரண்டும் மாமேதையின் அம்சங்களாகும். இவை நம் ஸ்வாமியிடம் பரிபூர்ணமாக இருக்கக் காண்கிறோம். உதாரணமாக திருப்பாவையில் ஆழ்வார்களை எழுப்பும் பாசுரங்களெல்லாவற்றிலும் உள்ளே சயனித்திருக்கிற ஒரு வ்யக்தியை வெளியிலுள்ளவர்கள் எழுப்புவதாகக் காண்கின்றது. ஆனால் "தூமணி மாடம்" என்ற பாசுரத்தில் "மாமீர் அவளை எழுப்பீரோ" என்று கூறி ஒருத்தியைக் கூப்பிட்டு மற்றொருத்தியை எழுப்புமாறு சொல்லப்பட்டுள்ளது. இதன் விசேஷத்தை நம் ஸ்வாமி கூறுகிறார்—"இது திருமழிசையாழ்வாரை எழுப்பும் பாசுரம். மற்ற ஆழ்வார்களுக்கு ஆசாரியன் ஒருவர் இருந்ததாகத் தெரியவில்லை. திருமழிசையாழ்வார் ஒருவருக்குமட்டும் பேயாழ்வார் ஆசாரியனாக நம் குருபரம்பராப்ரபாவ நூல் கூறுகின்றது. ஆகவே பேயாழ்வாரை விளித்துத் திருமழிசையாழ்வாரை எழுப்பச் சொல்லுவதாக [அதாவது திருத்திப் பணிகொள்ளச் சொல்லுவதாக] கூறப்பட்டிருக்கிறது என்று. இது மிகப் பொருத்தமான ஆராய்ச்சியல்லவா? ஸ்வாமியின் அத்யாச்சர்யமான உல்லேகங்கள் இதைப்போல் நூற்றுக் கணக்காக இருக்கின்றன.

ஆழ்வார்களை எழுப்பும் பாசுரங்களை நம் ஸ்வாமி நிர்வஹித்து வருவதைப் பற்றிச் சிறிது விரித்துக்கூற விரும்புகிறேன். இதைப்பற்றி அபிப்ராயபேதம் அதிகம் காண்கின்றது. ஸாமான்ய ஜனங்களுக்கு இந்த விஷயம் புரிவது அரிது. உண்மையில் ஆண்டாள் ஆழ்வார்களையா அவ்வப்பாசுரங்களினால் எழுப்புகிறாள்? இக்காலத்து உபந்யாஸகர்களில் ஒருவர் ஒரு பாசுரத்தில் ஒரு ஆழ்வார் எழுப்பப் படுவதாகக் கூற, மற்றொருவர் அதே பாசுரத்தில் வேறொரு ஆழ்வார் எழுப்பப் படுவதாகக் கூறுகிறாரே இதன் உண்மை என்ன? சற்று விவரிக்கிறேன். மொத்தம் பத்துப் பாசுரங்களில் பத்து பாகவதர்கள் எழுப்பப்படுகிறார்கள். அவர்களின் லக்ஷணங்களை ஆராயுங்கால் நம்முடைய சிறந்த பாகவதர்களான பத்து ஆழ்வார்களும் அந்த லக்ஷணங்களை யுடையவர்களாகக் காணப்படக்கூடும். ஆகவே ஒவ்

ஒவ்வொரு ஆழ்வார் எழுப்பப் படுவதாக இதர உபந்யாஸகர்கள் எடுத்துக் காட்டுகிறார்கள். அவர்கள் மேலெழுந்தவாரியாக "பேய்ப்பெண்ணே" என்று வருகிற பாசுரம் பேயாழ்வாரைக் குறிக்கிறது...என்று இவ்விதம் சிரமப்படாமலே சொல்லுகிறார்கள். ஆனால் நம் ஸ்வாமிக்கு எல்லா ஆழ்வார்களுடையவும் எல்லாப் பாசுரங்களும் திடமாகத்திருவுள்ளத்தில் குடிகொண்டிருப்பதால் திருப்பாவையிலுள்ள எழுப்பும் பாசுரத்தின் ஒவ்வொரு அக்ஷரம், பதம், வாக்கியம், அடி—இவற்றிற்குச் சரியாக அந்தந்த ஆழ்வாரின் பாசுரங்களிலுள்ள சொற்களை எடுத்து ஸமன்வயப் படுத்தி அசைக்கமுடியாதபடி அப்பாசுரத்தில் குறிக்கப்படும் ஆழ்வாரை அகச்சான்று மூலம் எடுத்துக் காட்டுகிறார். இது அவருடைய அஸாதாரணப் பெருமையாகும். மற்ற வித்வான்களால் இது இயலாது என்றே கூறலாம். இந்த அபிப்ராய பேதங்கள் ப்ரமாதமானவையல்ல. வித்வான்களின் உபந்யாஸ சாதுர்யத்திற்கு இது ஒரு உரைகல். அவ்வளவுதான். "புள்ளும் சிலம்பினகாண்" பாசுரம் முதலாக "எல்லே யிளங்கிளியே" பாசுரம் வரையில் ஆழ்வார்களை யெழுப்புவதாக நம் ஸ்வாமி ஸாதிக்கும் நிர்வாஹங்கள் ஸ்வாமியின் பல பல வுரை நூல்களில் அச்சேறி உலகம் பரவியிருப்பதால் ஆங்காங்கு உபந்யாஸகர்கள் அதையே தழுவியும் மனப் பாடங்கொண்டும் பிரவசனம் செய்துவருவதற்கு ஸ்வாமியின் பக்தர்கள் பலரும் நன்றி பாராட்டவே கடமைப்பட்டிருக்கிறார்கள். ஆழ்வார்கள் பரமான அர்த்தங்கள்மட்டுமேயன்று. ஸ்வாமியின் உரை நூல்களிலுள்ள ஸ்வகீய மேதா ப்ரபாவ விலஸிதங்களான விசேஷார்த்தங்களெல்லாவற்றைப்பற்றியும் இப்படியே சொல்ல வேண்டும்.

நம் ஸ்வாமியின் மேதாவிலாஸம் (ஞானப்பொலிவு) ஈடு இணையற்றது. ஒரு ரத்னம் போன்றது. பஹுமுகியானது. ஒரு ரத்னத்தின் ஒவ்வொரு பட்டையும் எப்படி பிரகாசமாக மின்னுகிறதோ, அப்படியே நம் ஸ்வாமியின் ப்ரதிபை பஹுமுகங்களாலும் மின்னுகிறது. ஸ்வாமி ஒரு many faceted genius. ஸ்வாமியிடம் ஒன்றுக்கொன்று முரண்பாடான பலவும் ஒருங்கே குடிகொண்டிருக்கின்றன. அவை யாவன—வேதாத்யயனம், வேதலக்ஷணஜ்ஞானம், ஸம்ஸ்க்ருத ஸாகர பாரங்கதத்வம் தமிழ் இலக்கண இலக்கியக் கடல்கடந்தமை, அருளிச்செயல் வல்லமை, கவனசக்தி எல்லாம் ஒருங்கே அமைந்திருப்பது மிகவும் வியக்கத்தக்கது. வேதமோதியிருந்தால் பாஷாஜ்ஞான மிருக்காது பாஷாஜ்ஞான மிருப்பவர்களுக்கு வேதம் வராது. முதலில் ஸம்ஸ்க்ருதம் படித்துவிட்டால் பிறகு தமிழ்பிடிக்காது. முதலில் தமிழைப் படித்துத் தேர்ச்சிபெற்று விட்டால் பிறகு ஸம்ஸ்க்ருதம் வராது. நம்ஸ்வாமிக்கு எந்த ஞானத்தில்குறைகூற முடியும்? வடமொழி தென்மொழிகளிரண்டிலும் நம் ஸ்வாமிக்கு துல்யமான கவனசக்தியிருப்பது அபூர்வமான செல்வமாகும். உபந்யாஸங்கள் செய்யுமாற்றலும் வியாக்கியானங்கள் வியாஸங்கள் எழுதுமாற்றலும் நம்ஸ்வாமி யிடத்தில் தவிர மற்றோரிடத்தில் காணக்கிடைக்காது. ஸ்வாமியின் நூல்களைப்படித்துவிட்டு மற்று எதைப்படித்தாலும் உப்பில்லாத உணவாகவே காணும்.

நம் ஸ்வாமி பகவானின் ஓர் அபூர்வஸ்ருஷ்டியென்னவேணும். இப்படி லக்ஷத்தில் ஒருவரை பகவான் பல நூற்றுக்கணக்கான வருஷங்களுக்கு ஒருமுறை தான் படைக்கிறான். மணவாளமாமுனிகளுக்குப் பிறகு நம் ஸ்வாமிதான் மாமேதை. இவரைப்போல் இன்னொரு மஹாபுருஷரை இன்னும் எவ்வளவு

காலத்திற்குப் பிறகு பகவான் ஸ்ருஷ்டிக்கப் போகிருனே? இப்போது 84-வது பிராயத்திலெழுந்தருளியிருக்கின்ற நம் ஸ்வாமி சுமார் 75 வருஷகாலமாக ஸ்ரீ வைஷ்ணவதரிசனத்திற்குச் செய்திருக்கும்—செய்துவரும் பணி அபாரமானது. ஸ்வாமியால் விளக்கவுரை செய்யப்பெருத உபயவேதாந்த ரஹஸ்ய ஸம்ப்ரதாய நூல் வடமொழியிலோ தென்மொழியிலோ ஒன்று மிச்சப்பட்டிருப்பதுண்டோ வென்று ஒவ்வொருவரும் பார்க்கவேணும். இந்த நூற்றுண்டையே அண்ணங்கராசார்ய சகாப்தமென்று கூறலாம். ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தின் வரலாறு பிற்காலத்தில் எழுதப்படுமானல் அதில் நம் ஸ்வாமியே அதிகமான இடம் பெறுவதற்கு உரியராவர். இதில் யாருக்கும் ஐயமிராது

அடிக்கடி நான் எனக்குள்ளே சிரித்துக்கொள்ளும் ஒரு விஷயத்தை யெழுதுகிறேன். ஸ்வாமி தமது வியாக்கியான நூல்களில் பல்லாயிரக்கணக்கான விஷயங்களை விளக்கியுள்ளார்; நன்கு விளக்கிவிட்டு 'மற்றவற்றை வல்லார் வாய்க் கேட்டுணர்க'' என்றெருவரி எழுதிவைப்பர்; அப்படி பல விடங்கள் காண்பேன். காணும்போது 'ஸ்வாமியைக் காட்டிலும் வேறு யார் இவ்விஷயங்களை இன்னும் விளக்கவல்லவருளர்!' என்று என்னுள்ளே சிரித்துக்கொள்வேன்.

29—12—74 தேதியன்று மாலை மேலமாம்பலம் சங்கரமடத்தில் ஸ்மார்த்த ப்ரமுகர்கள் நடத்திய வேதபரிஷத்துக்குப் போயிருந்தேன். அவ்விடத்தில் நம் ஸ்வாமி காட்டிய வேதத்திறமையைப்பற்றி எழுதாதிருக்க முடியவில்லை. வேதத்தில் நம் ஸ்வாமியின் பரிச்ரமம் ஒப்பற்றது. வேதத்தில் ஸ்வாமி செய்திருக்கும்-செய்துவரும் ஆராய்ச்சிகள் அபூர்வமானவை. ஸமீபகாலத்தில் ஸ்வாமி எழுதி வெளியிட்டிருக்கிற யஜுர்வேத ஸித்தாஞ்ஜனமென்னும் நூல் அன்று அங்குகனபாடிகளால் அரங்கேற்றப்பட்டது. ஸ்வாமியின் வேதோபந்யாஸத்தைக் கேட்ட ஸ்மார்த்த கனபாடிகள் பலர் பேசினதைத் தெரிவிக்கிறேன். "ஸ்வாமி செய்திருக்கும் வேதபத ஆராய்ச்சிகள் வாசாமகோசரம்; இப்படி வேறு யாராலும் செய்ய இயலாது; இந்த வயதில் இப்படி வேத பதங்களை அகராதி பரிபாஷையில் எடுத்தெழுதி அவற்றின் ஸ்வரபேதங்களையும் அதற்கான காரண விசேஷங்களையும் ஸ்வாமிதவிர வேறுயாரால் எடுத்துரைக்க முடியும்? அத்புதம்! ஆச்சரியம்!', என்றுர்கள்.

நம் ஸ்வாமியை அத்விதீயர் என்றே சொல்லவேணும். ஆங்கிலத்தில் unique personality என்று சொல்வார்கள். இவ்வளவு புலமையுடன் லக்ஷண ஸபாஷ்ய வேதஜ்ஞாதாவாக இருப்பவர் நம் ஸ்வாமி ஒருவரே. ஸ்வாமியிடம் காணப்படும் மேலே கூறிய ஒன்றுக்கொன்று முரண்பாடான விஷயங்கள் ஸ்வாமியை அத்விதீயராக ஆக்கும். முக்கியமான விஷயம் ஸ்வாமியின் ஞாபக சக்தி; தம்முடைய உபந்யாஸத்தில் இடையிடையே அருளிச்செயல், வேதம், கீதை, பூர்வாசார்ய ஸ்தோத்ரங்கள் முதலியவற்றினின்றும் மேற்கோள்களை யெடுத்துக் காட்டும்போது பாசுர லக்கம், (வேதமாயிருப்பின் இன்ன காண்டம், இன்ன ப்ரச்நம் என்பர்.) முதலியவற்றைக் குறிப்பிட்டே விளக்குவது அவரு

டைய ஸ்ம்ருதி விசேஷத்தை வெளிப்படுத்தும். நாம் எவ்வளவோ படிக்கிறோம். படிப்பதில் ஒரு பாகம் தான் நினைவிலிருக்கிறது. மனத்துளிருப்பதில் ஒரு பகுதியே சொல்ல முடிகிறது. ஸ்வாமி தாம் கற்ற ஸகல கலைகளையும் (விநோத ரஸமஞ்சரி, ஆத்திச்சூடி முதற்கொண்டு பாஷ்யங்கள் வரை) தம் நுனி நாவில் கொண்டுள்ளார் என்றால் அவர் ஒரு அபூர்வ வ்யக்தியென்றல்லது வேறு என்ன சொல்லலாகும்!

மற்றொரு விசேஷம். ஸ்வாமியின் உபந்யாஸங்களில் நம் பூர்வாசார்யர்களின் ரஹஸ்ய க்ரந்தங்களின் நறுமணம் கமழும். திருப்பாவைப் பாசுரங்களை விவரிக்கும்போது ஸ்ரீவசனபூஷணம் ஆசார்யஹ்ருதயம் போன்றவற்றினின்றும் அர்த்த விசேஷங்களை (சூர்ணிகையின் இலக்கத்தோடுகூடவே) வாரிவழங்குவது கேட்போரைப் பரவசப்படுத்தும்.

ஒரு விஷயத்தைச் சொல்லும் போது இடையே ஆயிரம் விஷயங்கள்வந்து புகுந்தாலும், ஆரம்பத்தில்விட்ட இடத்தை மறவாமல் பிடிக்குமாற்றல் நம் ஸ்வாமிக்கே அஸாதாரணமானது. இப்படியாக ஸ்வாமியைப்பற்றிச் சொல்லும் விஷயங்கள் ஏறிட்டு உபசாரமாகச் சொல்லப்படுவதன்று. அவ்வளவும் வாஸ்தவமான அம்சங்கள். அதிசயோக்தியன்று.

இன்னுமோர் விஷயத்தை விண்ணப்பித்துக்கொள்ள விரும்புகிறேன். உபந்யாஸம் செய்வதில் ஒருவித ஆர்ஜவம் ஸ்வாமிக்கு உண்டு. அதாவது செப்பம் அல்லது செம்மை. 'இதெல்லாம் யாருக்குத் தெரியப் போகிறது' என்றெண்ணாமல் வ்யாகரண ஸூத்ரங்கள், ப்ரஹ்மஸூத்ரங்கள் போன்ற பலவற்றைப் பிரமாணமாக எடுத்துக்கூறும் ஆர்ஜவத்தையே இங்குக் குறிப்பிட்டேன். நோட்டு, குறிப்பு இவைகளை வைத்துக்கொண்டு உபந்யஸிக்கும் வித்வான்கள்கூட நம் ஸ்வாமி கையாளும் அவ்வளவு மேற்கோள்களை உதாஹரிக்கக் காண்கின்றிலோம். இவையெல்லாவற்றுக்கும் மேலாக ஸ்வாமியின்எளிமை மிக விளங்குகின்றது. யானைக்குத் தன் பலம் தெரியாது என்பார்கள் அன்றோ! அதுபோல் ஸ்வாமியும் தாம் தம் பெருமையறியார். நண்பர்கள் எவ்வளவு ஸாமாந்யர்களானாலும் பரிவுடன் பேசுவர்; கடிதங்கள் எழுதுவர். இப்படிப்பட்ட ஸௌலப்ய குணத்தை ஸ்வாமியைப் போன்ற யோக்யதை படைத்த வேறெவரிடமும் காணவியலாது. நம்மிடம் ஸ்வாமி கலந்து பழகுவதன் மூலம் அவருடைய ஸௌசீல்யம் நன்கு வெளிப்படுகிறது.

கடைசியாக ஒருவார்த்தை. இந்த ஸ்வாமியின் உபந்யாஸங்களைப் பலகால் கேட்கும் நாமே பாக்யசாலிகள். நாமெல்லாரும் "இல்லையெனக்கெதி ரில்லையெனக்கெதிரில்லை யெனக்கெதிரே" என்று மகிழ்ந்து பெருமைப்படவேண்டும். இப்பெருமைக்கெல்லாம் காரணபூதரான நம் ஸ்வாமி பல்லாண்டு பல்லாண்டு ஆரோக்யத்துடன் எழுந்தருளியிருக்க வேண்டுமென்று பகவானைப் பிரார்த்தித்துக் கொண்டு விடைபெறுகிறேன்.

**தாஸன் R. V. சேஷாத்ரீ.**

4. * அந்தோநந்தக்ரஹணவசகோ யாதி ரங்கேச! யத்வத் பங்குர் நௌகாகுஹரநிஹிதோ நீயதே நாவிகேந, புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்ய அர்ப்பகாதிः த்வத்ஸம்ப்ராப்தௌ ப்ரபவதி ததா தேசிகேந்த்ரோ தயாலுः * வேதாந்த தேசிகன் ந்யாஸதிலகத்தில் அருளிச்செய்த சுலோகமிது. எம்பெருமானுடைய ஸம்பந்தத்தினால் நாமெல்லாம் உஜ்ஜீவித்துப்போகிறோம் என்கிறது இதில். மூன்று பாதங்களில் மூன்று த்ருஷ்டாந்தங்களை யருளிச்செய்கிறாரிதில். ரங்கேச என்று ஸ்ரீரங்கநாதனை விளித்துச் சொல்லுகிறார். [அந்தः அநந்தக்ரஹணவசகஸ் ஸந் யாதி] வழிநடந்து செல்லவேண்டிய குருடன் கண்தெரிந்தவொருவனைத் துணைகொண்டு செல்லுகிறான். [பங்குः நௌகா குஹரநிஹிதஸ் ஸந் நாவிகேந நீயதே] ஆறு கடக்க வேண்டிய நொண்டியானவன் ஓடக்காரனால் தோணியில் அமர்த்தப்பட்டுக் கடந்து செல்லுகிறான். ஆக இந்த இரண்டு த்ருஷ்டாந்தங்களினால் ஜ்ஞானஹீனனான சிஷ்யன் ஜ்ஞானவானான ஆசார்யனைக்கொண்டு கரையேறுகிறான்; அநுஷ்டானஹீனனான சிஷ்யன் அநுஷ்டான ஸம்பன்னனான ஆசார்யனைக்கொண்டு கரையேறுகிறான் என்று தெரிவிக்கப்பட்டதாகிறது. ஸமாநகாலஸ்தரான ஆசார்ய சிஷ்யர்களுக்கு இவ்விரண்டு த்ருஷ்டாந்தங்களும் இணங்கும். ஆயிரமாண்டுகட்கு முன்பெழுந்தருளியிருந்த எம்பெருமானார்க்கும் இப்போதிருக்கும் அஸ்மதாதிகளுக்கும் இணங்கும்படியாக மூன்றாவது த்ருஷ்டாந்த மருளிச்செய்கிறார். [புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்ய அர்ப்பகாதி:] ஆயிரமாண்டுகட்கு முன்பு ஒரு மஹாப்ரபு இருந்தான்; அவனிடம் அமாத்யனாக இருந்து ஸேவைபண்ணினவொருவன் அபரிமிதமான பொருளையீட்டி நிதிவைத்திட்டான்; அதன் வட்டியை அவ்வமாத்யனுடைய பரம்பரையைச் சேர்ந்தவர்கள் வம்சபாரம்பர்யேண அநுபவித்து வருகிறார்கள். அவர்கள் அரசனையும் கண்டவர்களல்லர், (தங்கள் கூடஸ்தனான) அமாத்யனையுங் கண்டவர்களல்லர்; ஆயினும் கூடஸ்தர் சேமித்துவைத்த நிதியை நிராக்ஷேபமாக அநுபவித்துவரக் கடமைப்பட்டிருக்கிறார்கள். [ததா த்வத்ஸம்ப்ராப்தௌ ப்ரபவதி (கः) தயாளு: தேசிகேந்த்ரः] கீழே காட்டிய மூன்றாவது த்ருஷ்டாந்தத்தின்படி பரம காருணிகரான எம்பெருமானாருடைய ஸம்பந்தத்தைக்கொண்டு நாங்கள் வாழ்ந்து போகிறோமென்கை. அடுத்த ச்லோகத்தினால் இதை விவரித்தருளுகிறார் [*உக்த்யா தநஞ்ஜய *] இதை உகர வரிசையில் காண்க. ... ... ... *

5. * ஆசைலாத் அத்ரிகந்யா சரணகிஸலயந்யாஸதந்யோபகண்டாத் ஆ ரக்ஷாநீதஸீதா முக கமல ஸமுல்லாஸ ஹேதோச் ச ஸேதோ:, ஆ ச ப்ராச்ய ப்ரதீச்யக்ஷிதிதரயுகலாத் ஸூர்ய சந்த்ராவதம்ஸாத் மீமாம்ஸா சாஸ்த்ரயுக்மச்ரமவிமலமநா: ம்ருக்யதாம் மாத்ருசோந்ய: * இந்த ச்லோகம் ஆளவந்தார் இளம்பிராயத்தில் [வித்யார்த்தி தசையில்] சோழராஜ ஸபைக்கு விடுத்தது. * இமவந்தந் தொடங்கி யிருங்கடலளவும், கீழ்த்திசை மேற்றிசை யளவும் ஆக நாற்றிசையினுள்ளும் உபயமீமாம்ஸைகளிலும் கைதேர்ந்த வித்வான் என்னைப்போன்ற வொருவனைத் தேடிப்பிடியுங்கள் என்றவாறு. குருபரம்பரா ப்ரபாவ நூலில் ஆளவந்தார் வைபவத்தில் விரிவுகாண்க. இங்ஙனங் கூறியது தற்புகழ்ச்சியாகாது. நன்னூலாசிரியர் * தோன்று தோற்றித் துறைபலமுடிப்பினும், தான் தற்புகழ்தல் தகுதியன்றே * என்று முற்படக்கூறி, உடனே * மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினும், மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினும், தன்னை

மறுதலே பழித்தகாலேயும், தன்னுடையாற்ற லுணராரிடையினும், தன்னேப் புகழ் தலும் தகும் புலவோற்கே * என்ருர். .... ... ... *

6. * இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந, நசாசுச்ருஷவே வாச்யம் ந ச மாம் யோப்ய ஸூயதி * இது கீதையின் முடிவில் கண்ணபிரான் அர்ஜுநனுக்குக் கூறியது. கீதாசாஸ்த்ரத்தின் அருமைபெருமை விளங்குவதற்காகக் கூறின சுலோகமிது. இன்னுரின்னுர்க்கு இதை நீ உபதேசிக்கலாகாதென்று தடையிட்டுக் கூறுவதாமிது, கீதையின் தொடக்கத்திலேயே கூறியிருக்க வேண்டுமிது; இவ்வளவு அரியபெரிய பொருள்களே இவனுக்குச் சொல்லப்போகிருேமென்று முதலில் கண்ணபிரானுக்கும் தெரியாதுபோலும், தன்னேயுமறியாமல் சொல்லித் தலேக்கட்டினபிறகு பொருள் களின் சீர்மையை நோக்கி இங்ஙனே நிபந்தனே செய்கிறபடி. இதில் (தே) என்றது த்வயா என்றபடி. இதம் அதபஸ்காய ந வாச்யம்; அபக்தாய ந வாச்யம்; 'அசுச் ரூஷவே ந வாச்யம்; மாம் யঃ அப்யஸூயதி தஸ்மை ச ந வாச்யம் — என்று நான்கு கட்டளேகள். ஆசாரஹீனனுக்குச் சொல்லலாகாது; பக்தியில்லாதவனுக்குச் சொல்லலாகாது; சுச்ருஷை பண்ணுதவனுக்குச் சொல்லலாகாது; எனது கல்யாண குணங்களேச் சொல்ல, அது பொருுதே நிந்திப்பவனுக்குச் சொல்லலாகாது என்றபடி. ... ... ... ... ... *

7. * ஈசாநாம் ஜகதாம் அதீசதயிதாம் நித்யாநபாயாம் ச்ரியம் ஸம்ச்ரித்ய, ஆச்ரயணே சிதாகிலகுணஸ்ய அங்க்ரீ ஹரேராச்ரயே, இஷ்டோபாயதயா, ச்ரியா ச ஸஹிதா யாத்மேச்வராயார்த்தயே கர்த்தும் தாஸ்யமசேஷமப்ரதிஹதம் நித்யம் த்வஹம் நிர்மமঃ * பட்டர் ஸாதித்த அஷ்ட ச்லோகியில் ஆருவது சுலோகமிது. கீழ் ஐந்தாவது சுலோகமான * நேத்ருத்வம் நித்ய யோகம் * இத்யாதியும் இந்த ஆருவது சுலோகமும் த்வயமென்கிற மந்த்ரரத்னத்தின் பொருள் விவரணமாக அமைந்தவை, பூர்வகண்டமென்றும் உத்தரகண்டமென்றும் இரண்டு கண்டமாக அமைந்துள்ள த்வயமந்த்ரத்தின் திரண்டபொருளே யருளிச்செய்கிருரிதில். ' உலகங்களுக்குத் தலேவியாய் ஸர்வேச்வரனுக்கு ப்ராணவல்லபையாய் ஒருபோதும் விட்டுப்பிரியாத வளாயிருக்கிற பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாகப்பற்றி சரணவரணத்திற்குப் பாங்கான ஸகலகுணங்களேயுமுடைய எம்பெருமானுடைய திருவடிகளே இஷ்ட ஸாதநமாகப் பற்றுகின்றேன் ' என்று பூர்வ கண்டார்த்தத்தை அநுஸந்தித்து 'பெரிய பிராட்டியாரோடு கூடியிருந்துள்ள ஸர்வசேஷியான நாராயணனுக்கு கைங்கர்யத்தில் களேயான மமகாரம் சிறிதுமில்லாத அடியேன் ஸகலவித கைங்கர்யத்தையும் இடை யூறும் இடைவீடுமின்றிச் செய்யும்பொருட்டு ப்ரார்த்திக்கின்றேன் ' என்று உத்தர கண்டார்த்தத்தை அநுஸந்தித்து இனியராகிருர். பெரியபிராட்டியார்க்கு இதில் மூன்று விசேஷணங்களிடுகிருர். இவற்றுக்குத் திருவுள்ளமேதென்னில்; கேண்மின், பிராட்டியின் புருஷகாரம் அவ்வளவு காரியம் செய்யுமோ என்கிற சங்கைக்குப் பரி ஹாரமாக முதலிரண்டு விசேஷணங்களமைந்தன. இவள் சேதநர்களனேவர்க்கும் மாதாவாய் அந்த ஸம்பந்தமடியாக இவர்களுடைய வருத்தம் கண்டு பொறுத்திருக்க மாட்டாதேயிருக்கிறவொரு தன்மையும், எம்பெருமானுக்குப் பத்தினியாய் * பித்தர்

பணிமலர்மேல் பாவைக்கு * என்கிறபடியே அவன்தன் வைலக்ஷண்யத்தைக் கண்டு பிச்சேறித் தன்சொற்படி நடக்கும்படி அபிமத விஷயமாயிருக்கிறவொரு தன்மையும் உடையளாகையாலே ஒருவகையாலும் பழுதாகமாட்டாத புருஷகாரம். உலகில் புருஷகாரம் செய்பவர்களுக்கு இரண்டு தன்மைகள் வேண்டும். எவர் விஷயத்தில் புருஷகாரம் செய்யவேண்டுமோ அவர் விஷயத்தில் நெஞ்சார்ந்த அன்பு இருக்க வேண்டியதொன்று. யாரிடத்தில் புருஷகாரம் செய்யவேணுமோ அவரிடத்தில் தம் வாக்கு வெற்றிபெற்றே தீரும்படியான வால்லப்ய மிருக்கவேண்டியது மற்றொன்று. இவ்விரண்டும் பிராட்டியின்பக்கல் புஷ்கலமென்பது இவ்விரண்டு விசேஷணங்களினாலும் நிரூபிக்கப்பட்டதாயிற்று. 'நித்யாநபாயாம்' என்கிற மூன்றாவது விசேஷணத்தினால் எம்பெருமானை ஆச்ரயிக்க ருசியே வேண்டுவது, காலம்பார்க்க வேண்டாவென்பது காட்டப்படுகிறது. பிராட்டி எப்போதும் எம்பெருமானோடு கூடியேயிருக்கின்றாளென்று தெரிந்துகொள்ளுமளவில் 'புருஷகாரஞ் செய்பவள் அருகேயிருக்குங் காலம்பார்த்து ஆச்ரயிக்கவேணும்' என்று ஸமயப்ரதீக்ஷை வேண்டியதில்லை என்பதும் தெரிந்துகொண்டதாகுமன்றோ! இந்த ச்லோகத்தில் 'ஆச்ரயே, அர்த்தயே' என்கிற உத்தமபுருஷக்ரியா பதங்களை ப்ரயோகித்திருக்கையாலே த்வயத்தின் அர்த்தத்தைத் தாம் வியாக்கியானிக்கின்ற அளவேயன்றிக்கே தம்முடைய அநுஷ்டானசேஷமாகவும் கொண்டருளினாரென்கிற விசேஷம் உணரத் தக்கது. ... ... ... ... ... *

8. * ஈசாநாம் ஜகதோஸ்ய வேங்கடபதே: விஷ்ணோ: பராம் ப்ரேயஸீம் தத்வக்ஷஸ்ஸ்தல நித்யவாஸரஸிகாம் தத்க்ஷாந்திஸம்வர்த்திநீம், பத்மாலங்க்ருதபாணிபல்லவயுகாம் பத்மாஸநஸ்தாம் ச்ரியம் வாத்ஸல்யாதிகுணோஜ்ஜ்வலாம் பகவதீம் வந்தே ஜகந் மாதரம் * அஸ்மத்குல கூடஸ்தரான ப்ரதிவாதிபயங்கரம் அண்ணன் அருளிச் செய்த * கமலாகுசசூசுகேத்யாதி ஸ்ரீவேங்கடேசஸ்துதியின் முடிவிலுள்ள சுலோக மிது. அலர்மேல்மங்கைத் தாயார் விஷயமான துதி. "இவ்வுலகுக்கெல்லாம் ஈச்வரியாயும், திருமலையப்பனுக்கு ப்ராண வல்லபையாயும், அவனது திருமார்பி லேயே நித்யவாஸஞ் செய்வதில் விருப்பமுடையவளாயும், அப்பெருமானுடைய க்ஷமாகுணத்தை வளரச்செய்பவளாயும் தாமரை மலரினால் அலங்கரிக்கப்பட்டுப் பல்லவம்போன்ற இரண்டு திருக்கைகளையுடையளாயும், தாமரைத் தவிசில் வீற்றி ருப்பவளாயும் வாத்ஸல்யம் முதலிய குணங்களால் திகழாநின்றவளாயும், பரம பூஜ்யையாயும், உலகுக்கெல்லாம் தாயாயுமிருக்கின்ற அலர்மேல்மங்கைப் பிராட் டியை அடியேன் வணங்குகின்றேன்' என்பது இதன் கருத்தாம். * அஸ்யேசாநா ஜகதோ விஷ்ணுபத்நீ * என்ற ச்ருதிச் சாயையிலே பணித்ததாயிற்று ப்ரதமபாதம். "அவன் மார்பை விட்டுப்பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப் பிரிவது" என்கிற ஸ்ரீஸூக் திக்குச்சேர * தத்வக்ஷஸ்தல நித்யவாஸ ரஸிகாம் * என்றது. * அஸ்தி கர்மார்ஹ பலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷண மநுக்ரஹே" என்கிற தேசிக ஸ்ரீஸூக்தியை யுட்கொண்டு 'தத்க்ஷாந்தி ஸம்வர்த் திநீம்" என்றது. "புருஷகார பலத்தாலே ஸ்வாதந்த்ர்யம் தலைசாய்ந்தால் தலை யெடுக்கும் குணங்களைச் சொல்லுகிறது நாராயணபதம்" (முமுக்ஷுப்படி) என்ற

விடத்து அர்த்த விசேஷங்கள் இங்கே அநுஸந்தேயம். பத்மாலங்க்ருதேத்யாதி மூன்றும் பாதத்தில் * பத்மப்ரியே பத்மினி பத்மஹஸ்தே * இத்யாதி ஸ்ரீஸூக்தம் அநுஸந்தேயம். வாத்ஸல்யாதி குணோஜ்வலாம் என்றவிடத்தில் * ஸஹதர்மசரீம் சௌரேஸ் ஸம்மந்த்ரிதி ஜகத்திதாம், அநுக்ரஹமயீம் வந்தே நித்யமஜ்ஞாதநிக்ரஹாம் * என்ற தேசிகஸூக்தியை ஸ்மரிப்பது. ஆக இப்படிப்பட்ட பெருமைவாய்ந்த பிராட்டியைத் தொழுகின்றேன் என்றது. ... ... ... *

9. * **உக்த்யா தநஞ்ஜயவிபீஷணலக்ஷ்யயா தே** ப்ரத்யாய்ய லக்ஷ்மணமுநேர் பவதா விதீர்ணம், ச்ருத்வா வரம் தததநுபந்தமதாவலிப்தே நித்யம் ப்ரஸீத பகவந் மயி ரங்கநாத * வேதாந்த தேசிகனருளிய ந்யாஸதிலகத்திலுள்ள சுலோகமிது. இதன் கீழ்ச்லோகம் * **அந்தோநந்தக்ரஹணவசக:** * என்பது கீழ் அகரவரிசையில் (4) விவரிக்கப்பட்டுள்ளது. அதனை மீண்டும் ஒருவிசை வாசித்துவிட்டு இதை வாசிக்கவேணும். எம்பெருமானுர் அருளிச்செய்த சரணுகதி கத்யத்தில், அர்ஜுனனுக்கு அபயமளித்த ஸர்வதர்மாந் சுலோகத்தையும், விபீஷணனுக்கு அபயமளித்த * ஸக்ருதேவ ப்ரபந்நாய ச்லோகத்தையும் ஸ்ரீரங்கநாதன் நினைவூட்டி "இதி மயைவ ஹி உக்தம்" என்று சொல்லியிருப்பதுகொண்டு இங்கு * உக்த்யா தநஞ்ஜயேத்யாதி பணித்தார். அதற்குமேல் "**லக்ஷ்மணமுநே: பவதா விதீர்ணம் வரம் ச்ருத்வா**" என்றதுண்டே, இதுதான் இந்த ச்லோகத்திற்கு ஜீவநாடி. ஸ்ரீரங்கநாதன் எம்பெருமானுர்க்கு ஒருவரம் அளித்ததாக ஸ்வாமி தேசிகன் ஸாதிக்கிறுரிங்கு. திருக்குடந்தையில் பல வித்வான்கள்கூடி அச்சிட்ட வியாக்கியானத்தில் அந்தவரம் விசதம். இதற்கு வியாக்கியானமே வேண்டியதில்லை. (ச்ருத்வா வரம்) என்றவுடனே "**தததநுபந்தமதாவலிப்தே**" என்றருளிச் செய்திருக்கையாலே இதனுல் வரஸ்வரூபம் நன்கு விளக்கப்பட்டதாகிறது. எம்பெருமானுருடைய ஸம்பந்தஸம்பந்தி ஸம்பந்திகளுக்கும் மோக்ஷமளிப்பதாக வரமிருந்தாலொழிய (தததநுபந்தமதாவலிப்தே) என்ன முடியாதன்றே. மணவாளமாமுனிகள் யதிராஜவிம்சதியில் * காலத்ரயேபி கரணத்ரய நிர்மிதாதிபாபக்ரியஸ்ய சரணம் பகவத்க்ஷமைவ, ஸா ச த்வயைவ கமலாரமணேர்த்திதா யத் க்ஷேமஸ் ஸ ஏவ ஹி யதீந்த்ர பவச்ச்ரிதாநாம் * என்றருளிய சுலோகமும் இங்கே அநுஸந்தேயம். ... ... ... *

10. ***உத்தரம் ப்ரோச்யதாம் க்ஷிப்ரம்**—கேசவம் வீக்ஷ்ய ஜம்புகா:, நிபத்ய தத்ர ப்ராஹ்ருஷ்யந் கிம் தேஷாம் ஹர்ஷகாரணம்? * ஸம்ஸ்க்ருதபண்டிதர்களின் போதுபோக்குகளில் ப்ரஹேளிகைகள் சொல்லிப் போதுபோக்குதல் ஒன்று. விநோதப் பேச்சு இது. [**உத்தரம் க்ஷிப்ரம் ப்ரோச்யதாம்**] மேலே கேட்கிற கேள்விக்கு விரைவில் விடை கூறவேணும். என்ன கேள்வியென்னில்; [**ஜம்புகா: கேசவம் வீக்ஷ்ய தத்ர நிபத்ய ப்ராஹ்ருஷ்யந்**] நரிகள் கேசவனைக் கண்டு அங்கே விழுந்து களித்தன. களிப்புக்குக் காரணமென்ன? என்பது வினு. இதற்கு விடையாவது—'கேசவம்' என்பதை கே—சவம் என்று இரண்டு பதமாகப் பிரித்துக்கொள்க. கம் என்று தண்ணீருக்குப் பெயர்: தண்ணீரில் ஒரு பிணம் மிதக்கக்கண்ட நரிகள் உடனே தண்ணீரில் விழுந்து அந்த ப்ரேதத்தை வயிருரவுண்டு களித்தனவென்கை. ... *

ஸ்ரீரஸ்து.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சீ, பிரதிவாதிபயங்கரம். அண்ணங்கராசாரியர்

ஆனந்தஹூ வைகுண்ட ஏகாதசியன்று எழுதத் தொடங்கிய

# ஸர்வ சாஸ்த்ரார்த்த ரத்நாவளி

[இப்பெயரிட்டு வடமொழியில் அடியேன் எழுதிவரும் நூல் எனது வைதிக மநோஹரா பத்திரிகையில் பிரசுரமாகி வருகின்றது. அது வடமொழி வல்லுநர்க்குப் பயன்பட்டு வருகின்றது. பெரும்பாலும் அதன் மொழிபெயர்ப்பாகவே தமிழறிஞர்கட்கு உதவுமாறு இந்நூலை யெழுதத் தொடங்குகின்றேன். ச்ருதீதிஹாஸ புராணங்களிலிருந்தும், நம் பூர்வாசார்ய க்ரந்தங்களிலிருந்தும், மஹாகவிகளின்கருதிகளிலிருந்தும் பலவகைப்பட்ட ப்ரமாணவசனங்களை அகராதி வரிசையிலிட்டுச் சுருக்கமான விவரணமும் செய்யலாகிறது]

## — நூல் தொடக்கம் —

1. ❁ அநந்தா வை வேதா: ❁ தைத்திரீய யஜுர் ப்ராஹ்மணத்தில் காடக மென்று வழங்கும் பகுதியில் முதல் ப்ரச்நத்தில் பரத்வாஜோபாக்கியானமொன்று ஓதப்பட்டுள்ளது. ❁ பரத்வாஜோ ஹ த்ரிபிராயுர்பிர் ப்ரஹ்மசர்யமுவாஸ ❁ என்று தொடங்கியோதப்பட்டு வருமந்த உபாக்கியானத்தின் ஸாரமாவது — பரத்வாஜரென்னும் மஹர்ஷி தேவேந்திரனுடைய அநுக்ரஹத்தினால் முந்நூறு பிராயம் ஜீவித்திருக்கப் பெற்று அந்த வாழ்நாளில் வேதமோதத் தொடங்கினர். வேதமோதிவருகின்றார். முந்நூறுபிராயம் முடியுந்தருவாய் ஆயிற்று; கிழத்தனம் முதிர்ந்து ஜீர்ண சரீரராய் முமூர்ஷு நிலையில் படுத்திருக்கிறார். அந்நிலைமையில் தேவேந்திரன் அவரிடம்வந்து ''முனிவரே! உமக்கு மீண்டும் ஒரு நூறுபிராயம் வரமளிப்பதாக வந்திருக்கிறேன்; இதைப்பெற்று இவ்வாயுளில் நீர் என்னசெய்ய உத்தேசிக்கிறீர்? என்று கேட்க, அதற்கு முனிவர் 'வேதாத்யயனமே செய்வேன்' என்றார். இங்ஙனஞ்சொன்ன முனிவருடைய கருத்து என்னவென்றால், கீழ்க்கழிந்த மூன்று ஆயுட்களில் மூன்று வேதங்களை ஓதி முடித்துவிட்டோம்; இனி நான்காவது ஆயுள் கிடைத்தால் இதில் நான்காவது வேதத்தையும் ஓதி ❁ சதுர்வேதீ ❁ என்று பெயர்பெற்றுவிடலாம்— என்பதாக. இதனையறிந்த இந்திரன் இம்முனிவர்க்கு 'வேதங்கள் அநந்தங்கள், எத்தனை ஆயுட்கள் பெற்றாலும் ஓதித் தலைக்கட்ட முடியாதவை' என்பதையுணர்த்த வேணுமென்றெண்ணி, இதுவரையில் எங்குங் கண்டறியாத மூன்று பெரிய மலைகளைக் காட்டி, ஒவ்வொரு மலையிலிருந்தும் ஒவ்வொரு முஷ்டி மண்ணையெடுத்துக் காட்டி, 'முனிவரே! கீழ்க்கழிந்த முந்நூறு வருஷங்களிலும் நீர் ஓதின வேதபாகம் இந்த மூன்று முஷ்டியளவே காணும்; இதோ மலைமலையாக வுள்ளவற்றை நீர் ஓதவில்லை' என்று சொல்லும்போது ❁ அநந்தா வை வேதா: ❁ என்றான். மறைகள் அந்தமில்லாதவை என்றவாறு. இவ்வளவே சொல்லி நின்றுவிடாமல், ஸகல வேதங்களையும் ஓதினவராம்படிக்கு ஓர் உபாயஞ் சொன்னான் இந்திரன். (அதாவது) ஸாவித்ரவித்யையை முனிவர்க்கு உபதேசித்து இதுதான் ஸர்வவித்யை என்றான். அந்த ஸாவித்ரவித்யை எதுவென்றால், [ஸவிதா—ஸூர்யன்] வதளபூஷண பாஸ்கரரென்று ப்ரஸித்தரான நம்மாழ்வாருடைய அருளிச்செயலேயாம்,

௧௦௦ ❁

2. * அந்நவாந் அந்நாதோ பவதி * தைத்திரீயோபநிஷத்தில் இந்த வாக்கியம் ப்ரஸித்தமானது. இதன் பொருள் என்னவெனில்; அன்னத்தைப் பெற்றவனுகிறுன், அன்னத்தை யுண்பவனுமாகிறுன்—என்கை. அன்னத்தைப் பெற்றுல் அதை உண்ணமாட்டானே? 'அந்நவாந் பவதி' என்றுல் போதாதோ? * அந்நாதோ பவதி * என்றும் தனியே சொல்லவேணுமோ? என்று சங்கை பிறக்கும். கேண்மின்; அன்னமென்பதற்குச் சோறு என்றுமட்டும் பொருளன்று; மானிடராய்ப் பிறந்தவர்கள் அநுபவிக்கும் விபவமெல்லாவற்றுக்கும் பெயரென்று கொள்க. ஐச்வர்யம் பெற்றவர்கள் எல்லாரும் அந்த ஐச்வர்யத்தை அநுபவிக்கவும் பெறுகிறுர்களென்று கண்டதில்லை. க்ருபணர்களும் வ்யாதிக்ரஸ்தர்களும் தௌர்ப்பாக்யசாலிகளும் அநுபவதரித்ரர்களாக ஆகிறுர்களென்பதைக் கட்கூடாகக் காண்கிறேம். * போஜ்யம் போஜநசக்திச் ச...... விபவோ தாநஸம்பத்தி: நால்பஸ்ய தபஸ: ப்பலம் * என்றது காண்க. இந்த ச்ருதிவாக்யத்தின் அர்த்தத்தை வஸுதேவர் பக்கலிலே காணுநின்றேம். அவர் கண்ணபிரானைப் பிள்ளையாகப் பெற்றும் * நந்தன் பெற்றனன் நல்வினையில்லா நங்கள்கோன் வசுதேவன் பெற்றிலனே * * எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்றுளே * என்று தெய்வத் தேவகி புலம்பும் படியாயிற்றே. அந்நவத்த்வம் வஸுதேவனுக்கும், அந்நாதத்வம் நந்தகோபனுக்குமன்றே ஆயிற்று. * அந்நம் ப்ரஹ்மேதி வ்யஜாநாத் * என்கிற உபநிஷத்தை இங்கே ஸ்மரிப்பது. ... ... ... ... *

3. **அநிசம் பஜதாம் அநந்யபாஜாம் சரணம்போருஹமாதரேண பும்ஸாம், விதரந் நியதம் விபூதிமிஷ்டாம் ஜய ராமாநுஜ ரங்கதாம்நி நித்யம்** * திருமலை அனந்தாழ்வானருளிச்செய்த ஸ்ரீராமாநுஜ சதுச்ச்லோகியில் முதல் சுலோகமிது. கோயில் திருமலை பெருமாள் கோயில் திருநாராயணபுரம் ஆகிய நான்கு திவ்யதேசங்களிலும் எம்பெருமானுருடைய வெற்றியை வாழ்த்துமித்துதியில், திருவரங்கம் பெரியகோயிலில் வெற்றியை வாழ்த்துவதாம் இந்த சுலோகம். (இதன் கருத்தாவது)—எம்பெருமானுரே! உமது திருவடித் தாமரையை அன்போடு எப்போதும் ஆச்ரயித்திருக்கிற அநந்யகதிகளான அடியார்களுக்கு எந்த விபூதி இஷ்டமோ அந்த விபூதியைத் திண்ணமாக அளித்துக்கொண்டு திருவரங்கம் பெரியகோயிலிலே எஞ்ஞான்றும் வாழக்கடவீர்—என்பதாம். மதுரகவிகள் * தேவுமற்றறியேன் * என்று சொல்லி வேருரு தெய்வமறியாதே ஆழ்வாரையேபற்றியிருந்தாப்போலே, ஸ்வாமிந்! தேவரீரை இடைவிடாது அன்போடு அடிபணிந்திருக்கும் அடியவர்கட்கு * பொன்னுலகாளீரோ * என்றுப்போலே த்ருஷ்டாத்ருஷ்டங்களில் எதை வேண்டினுலும் அதையளித்துக்கொண்டு தென் திருவரங்கத்திலே பல்லாண்டு பல்லாண்டாக எழுந்தருளியிருக்கவேணுமென்று மங்களாசாஸநம் செய்தாராயிற்று. மோக்ஷப்ரதத்வமென்பது எம்பெருமானெருவனுக்கே அஸாதாரண லக்ஷணமாயிருக்க, இங்ஙனே சொல்லலாமோ? நித்யவிபூதிச் செல்வத்தை ஸ்வாமியளிக்கவல்லரோ என்று சங்கிக்கவேண்டா; * தத்தே ரங்கீ நிஜமபி பதம் தேசிகாதேசகாங்க்ஷீ * என்று ந்யாஸதிலகத்தில் தேசிகன் பணித்தபடியே ஸ்வாமியின் நியமனமிருந்தாலொழிய எம்பெருமான்தானும் முத்தியளிக்க வல்லனல்லனே. தாபயித்ருத்வமும் தாத்ருத்வ பர்யாயமாகக் கொள்ளப்படுவதால் ஸ்வாமியையே முக்திப்ரதராகச் சொல்லத்தகும். ... ... *

11. * ஸூஷுண ஸூதயே * வேதத்தில் முன்னம் ஸம்ஹிதையோதி, பிறகு பதபாடம் ஓதி அதன்பிறகு க்ரமம் ஓதவேணும். பெருமாளுடைய திருவீதிப் புறப்பாடுகளில் க்ரம பாராயணம் நடைபெறும். அதில் த்ரிக்ரமம் என்று ஒரு ஸங்கேதம். மூன்று பதங்களைச் சேர்த்துக் க்ரமம் சொல்லுவதற்கு த்ரிக்ரமமென்று பெயர். அது வேத மோதினவர்களுக்குத் தெரியும். * ஊர்த்வ ஊஷுண ஊதயே * என்றவிடத்திலும் * மோ ஷூ ண இந்த்ர * என்றவிடத்திலும் த்ரிக்ரமமுண்டு. (உ, ஸு, ந:) என்னும் மூன்றுபதங்களைச் சேர்த்தும், (மோ, ஸு, ந:) என்னும் மூன்று பதங்களைச் சேர்த்தும் க்ரமம் சொல்லுகையாலே த்ரிக்ரமமெனப்படும். ... ... *

12. * உல்லங்க்ய ஸிந்தோஸ் ஸலிலம் ஸலீலம் யச் சோகவஹ்நிம் ஜநகாத்மஜாயா:, ஆதாய தேநைவ ததாஹ லங்காம் நமாமி தம் ப்ராஞ்ஜலிராஞ்ஜநேயம் * ஸ்ரீராமாயணபாராயணம் செய்பவர்கள் யாவரும் பாராயணத் தொடக்கத்தில் அநுஸந்திக்கும் பல தனியன் களில் இதுவொன்று சிறிய திருவடியைப்பற்றியது. இந்த சுலோகத்தின் பொருள் அற்புதமானது. திருக்குறுந்தாண்டகத்தில் * முன்பொலா இராவணன்றன் முதுமதிளிலங்கை வேவித்து, அன்பினாலனுமன் வந்து ஆங்கடியிணை பணிய * என் றருளிச் செய்தபடி இலங்கையை எரித்த அனுமன் எங்கிருந்து நெருப்பு கொணர்ந் தார்? என்று ஒருவர் கேட்டாராம்; அரக்கர்கள் தம்முடைய வாலில் வைத்த நெருப்பைக்கொண்டு எரித்தார்—என்று மற்றவர் விடைகூறினராம். அஃது உண்மை யன்று; ஸீதாபிராட்டியின் திருவுதரத்திலே சோகமாகிற நெருப்பு நிறைந்து கிடந்தது; அதை வாரியெடுத்துக்கொண்டுபோய் அதனாலேயே இலங்கை முழுவ தையுங் கொளுத்தினாரென்று சமத்காரம் பொலியச் சொல்லுகிறது இத்தனியனில்; [ஜநகாத்மஜாயா: சோகவஹ்நிம் ஆதாய தேநைவ லங்காம் ததாஹ] ஏவகாரத்தி னாலே வேறு நெருப்பினாலன்று என்று மறுத்துக் கூறுகிறபடி. பிராட்டி பட்ட வருத் தந்தீர இலங்கையைக் கொளுத்தினாரென்பது பரமதாற்பரியம். * கஞ்சன் வயிற்றில் நெருப்பென்னநின்ற நெடுமாலே! * என்ற திருப்பாவைப் பாசுரத்திலும் இங்ஙனே கருத்துக் காணலாம். திருவாய்ப்பாடி ஆய்ச்சிமார்களின் உள்ளத்திலிருந்த அச்ச மாகிற நெருப்பைக் கொண்டுபோய்க் கண்ணன் கம்ஸனது வயிற்றில் கொட்டினான் என்னலாம். ... ... ... ... ... *

13. * ஊநஷோடசவர்ஷோ மே ராமோ ராஜீவலோசந:, ந யுத்தயோக்யதாம் அஸ்ய பச்யாமி ஸஹ ராக்ஷஸை: * விச்வாமித்ரமுனிவர் தசரத சக்ரவர்த்தியிடம் வந்து தம்முடைய வேள்வியை இடையூறின்றித் தலைக்கட்டிக் கொடுக்க இராமபிரானைத் தம்முடன் அனுப்பித்தர வேணுமென்று வேண்டியபோது முனிவரைநோக்கி சக்ரவர்த்தி கூறும் சுலோகமிது. என் புதல்வனான இராமனுக்கு இன்னும் பதினாறு பிராயங்கூட நிரம்ப வில்லையே, அரக்கர்களோடு போர்புரியுமாற்றல் இவனுக்கு இல்லையே! என்கிறான் மன்னவன். பதினாறுபிராயங்கூட நிரம்பவில்லையென்றதனால் பதினைந்துபிராயமோ பதினான்குபிராயமோ நிரம்பிவிட்டதென்று தோன்றும்; அப்படியில்லை. விச்வாமித்ர யாகஸம்ரக்ஷணம் பண்ணுங்காலத்தில் இராமபிரானுக்கு வயது பன்னிரண்டென்று பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீராமாயண வசனங்கள் கொண்டே நிஷ்கர்ஷித்தருளுகிறார். இங்கு * ராமோ ராஜீவலோசந: * என்றது விசேஷப் பொருள் கொண்டது;

அதாவது—முனிவரே! உம்முடைய வேள்விக்கு இடையூறு செய்யும் அரக்கர்களோ நிசாசரர்கள்—இரவிலே வந்து நலிபவர்கள், என்னுடைய ராமனோ அஸ்தமித்த வாறே கண்ணுறங்குபவன். இவன் கண்விழித்திருந்து அந்த நிசாசரர்களோடு எப்படி போர்புரிய முடியும்?' என்ற கருத்துக் கொண்டது. ராஜீவமாவது தாமரை. அது ஸூர்யன் அஸ்தமித்தவாறே எப்படி மூடிக்கொள்ளுமோ அப்படி கண்மூடு மிளமையுடையவன் ராமன் என்று காட்டினபடி. ... ... ... *

14. * ருஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ணத்ருஷ்ணாதத்வமிவோதிதம், ஸஹஸ்ரசாகாம் யோத்ராக்ஷீத் த்ராமிடீம் ப்ரஹ்மஸம்ஹிதாம் * 'பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவம் தொடங்குகையில், ஆழ்வான், எம்பார், எம்பெருமானார், ஆளவந்தார், நாதமுனிகளாகிய இவ்வாசிரியர் களைத் துதித்துவிட்டு நம்மாழ்வாரைத் துதிப்பவர் இந்த சுலோகமருளிச்செய்கிறார். இதன் கருத்தாவது—'எம்பெருமான் விஷயமான ஆசைப்பெருக்கே ஆழ்வாராக வடிவெடுத்து வந்ததோ" என்னலாம்படி பகவத்விஷயத்தில் அளவிறந்த காதல் கொண்டவரும் 'த்ரமிடோபநிஷத்' என்னப்பட்ட திருவாய்மொழியை இந்தவுல கிருள் நீங்க வெளியிட்டருளினவருமான நம்மாழ்வாரைப் பணிவோம்' என்பதாம். வடமொழியினுலாகிய உபநிஷத்துக்களில் அநேக சாகாபேதங்கள் இருப்பதுபோல த்ரமிடோபநிஷத்திலும் அநேக சாகாபேதங்களுண்டென்று காட்டவேண்டி 'ஸஹஸ்ர சாகாம்' என்றார். திருவாய்மொழியின் ஒவ்வொரு பாசுரத்தையும் ஒவ்வொரு சாகையாகத் திருவுள்ளம் பற்றினரென்க. 'அத்ராக்ஷீத்' என்றதனால் எம்பெருமான் சிலசில ரிஷிகளைக்கொண்டு சிலசில வேதசாகைகளை ப்ரவர்த்திப்பித் ததுபோல ஸ்ரீ சடகோப முனிவரைக்கொண்டு திருவாய்மொழியை ப்ரவர்த்திப்பித்தா னென்று விளங்கும். இந்த ச்லோகம் ஆழ்வாரிடத்திலும் திருவாய்மொழியிடத்தி லும் பட்டர்க்கமைந்துள்ள அற்புதமான பக்தி வைலக்ஷண்யத்தை அழகிதாகப் புலப் படுத்தும். (க்ருஷ்ணத்ருஷ்ணா) என்கிற பதத்திற்கு (க்ருஷ்ணேத்ருஷ்ணா) என் றும் (க்ருஷ்ணஸ்ய த்ருஷ்ணா) என்றும் இரண்டுவகையாகவும் ஸமாஸம் பண்ண லாம். முந்தின ஸமாஸத்தில் ஆழ்வார் க்ருஷ்ணனிடத்தில் காதல்கொண்டவர் என்பது புலப்படும். பிந்தின ஸமாஸத்தில் எம்பெருமான் ஆழ்வார் பக்கலில் காதல் கொண்டவனென்பது புலப்படும். இரண்டையும் ஆழ்வார் தாமே திருவாய் மொழியில் வெளியிடுகிறார். (5-1-7) ''மெய்ம்மாலா யொழிந்தேன் எம்பிரானு மென்மேலானே'' என்கிற பாசுரம் காண்க. — ... — *

15. * ஏக ஏவ குண: ச்ரேஷ்ட: ய: க்ருதஜ்ஞத்வநாமக:, ஏக ஏவ மஹாந் தோஷ: ய: க்ருதக்நத்வநாமக: * மனிதர்களுக்கு அமையவேண்டிய நற்குணங்களில் தலையானது செய்ந்நன்றி மறவாமை; குணக்கேடுகளில் தலையானது செய்ந்நன்றி குன்றுகை. திருவள்ளுவர் குறளில் ''எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம் உய்வில்லை, செய் நன்றி கொன்ற மகற்கு'' என்றது காண்க. * க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதி: * என்றது வடநூல், வேதாந்த தேசிகன் ஸங்கல்பஸூர்யோதயத்தில் அற்புதமாக அருளிச்செய்வது கேளீர்;—* ப்ரதிதம் பாதகிவர்க்கம் க்ருதக்ந ஏகோ ஹி க்ருத்ஸ் நமதிசேதே, தமிமம் க்ரியமாணக்ந: தமபி துராத்மா கரிஷ்யமாணக்ந: * என்று. க்ருதக்நனுக்கு மேற்பட்டவன் க்ரியமாணக்நன், அவனிலும் விஞ்சியவன் கரிஷ்ய மாணக்நன். ... ... ... ... ... *

# விரும்பியெழுதுகிறேன், மிக விரும்பியெழுதுகிறேன், எதை?

## என்னுள்ளத்தி லுள்ளதை யெல்லாம்

### (ப்ர. அண்ணங்கராசாரியர்.)

மார்கழி மாத முடிவுநாளில் காலை 8 மணி முதல் 12 மணியளவாகத் திருப்பாவை சாத்துமுறையையும் ஆண்டாள் திருக்கல்யாணத்தையும் பக்தர்களுக்கு மங்களாசாஸனத்தையும் நிறைவேற்றிக்கொண்டு அன்று மாலையே தேவப்பெருமாள் திருவடிவாரம் வந்துசேர்ந்து திருக்கல்யாண மஹோத்ஸவத்தில் அந்வயித்து அடியார்கள் குழாங்களுடன் கூடியிருந்து குளிர்ந்தாயிற்று. முன்னம் பழைய கதைகளைச் சிறிது பேசவிரும்புகிறேன். புகழுடம்புடன் விளங்கும் ஸ்ரீ வைஷ்ணவ ரத்னம் M. R. கோவிந்தஸாமி நாயுடுவையும், அவருடைய தம்பி [சென்னையில் வாழ்ந்து கொண்டிருக்கும்) உயர்திரு. M. R. கன்னைய நாயுடுவையும் நெஞ்சார நினைத்து வாயாரவாழ்த்தி அதன் பிறகு மேலே எழுதுகின்றேன். இவர்களுடைய நட்பு எனக்கு 1920ஆம் ஆண்டில் தைவிகமாக ஏற்பட்டது. அப்போதே தொடங்கி இச்சகோதரர்களிருவரும் என்னைக்கொண்டு திவ்ய ப்ரபந்த திவ்யார்த்த தீபிகையுரையையும் மற்றும் பலபல நூல்களையும் எழுதுவித்துப் பதிப்பித்துப் பரவச்செய்த பேருதவி எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் மறக்கற்பாலதன்று. இவ்விருவரும் என்னோடு நட்புக்கொண்டது முதலாகவே "சென்னையில் ஸ்திரவாஸமாக வந்திருந்து ப்ரவசனங்கள் ஆரம்பிக்க வேணும்" என்று கோரிக் கொண்டிருந்தார்கள். தேவப்பெருமாளுடைய வழுவிலா வடிமையை விட்டு எங்கும் பதசலனம் செய்ய விருப்பமில்லாததனால் அவர்களது கோரிக்கைக்குச் சிறிதும் இசையாமலே யிருந்தேன். அடிக்கடி அதிகமாக நிர்ப்பந்திக்கத் தொடங்கவே 1929 ஆம் ஆண்டின் முடிவில் ஒருவாறு இசைய நேர்ந்தது. சனிக்கிழமைதோறும் பிற்பகலில் சென்னைக்கு வந்து அன்று மாலையிலும் ஞாயிறு காலையிலும் தொண்டை மண்டலம் ஹைஸ்கூல் ஹாலில் உபந்யாஸங்கள் செய்து போவதென்று ஏற்பாடாகி நடந்து வந்தது. முதன்முதலாக ஸ்ரீ ராமாநுஜர் வைபவ உபந்யாஸம் தொடங்கி ஆறு வேளைகளில் அது முடிக்கப்பட்டது. பிறகு ஸ்ரீ ராமாயண ப்ரவசனம் ஆரம்பமாகி நடந்து வந்ததென்பது நிற்க. இடையில் ஒரு விநோதச் செய்தி.

மேலே குறித்த ப்ராரம்பத்திற்குமுன் (ஒரு மூன்று வருடங்களுக்குமுன்னாக) அடியேன் ஸ்ரீரங்கத்தில் திருவத்யயனோத்ஸவத்திற்குச் சென்றிருந்தேன். அங்கு வைகுண்ட ஏகாதசிக்குமறுநாள் த்வாதசியன்று பகலில் எம்பெருமானார் ஸன்னிதியில் தென்னாசார்ய ஸத்ஸம்ப்ரதாய ஸபையொன்று நடப்பது வழக்கமாம். அதற்கு அடியேனைத் தலைமைதாங்கி உபந்யஸிக்கும்படி நியமித்திருந்தார்கள். அவ்வுபந்யாஸம் ஆரம்பமாகிற ஸமயத்தில் மஹான்களிருவர் விலக்ஷணமூர்த்திகள் சில பக்தர்களுடனே வந்து வீற்றிருந்தனர். அவர்கள் அப்போது சென்னைமாநகரில் காலக்ஷேபம் நடத்துபவர்களாம். ஸ்ரீ உ. வே. திருமழிசை ராய்ஜீ ஸ்ரீநிவாஸாசாரியர்ஸ்வாமி யொருவர், ஸ்ரீரங்கம் சடகோபாசாரியர்ஸ்வாமி மற்றொருவர். இவர்

களுடைய பரிசயம் அப்போது அடியேனுக்கு இல்லாததனால் 'இப் பெரியார்கள் யாவரோ?' என்று அருகேயுள்ள வொருவரை வினவுகையில், அவ்விருவரும் ஏக முகமாக ஸாதித்ததாவது — "நாங்கள் சென்னையில் கடை போட்டிருக்கிறோம்; இங்கே சரக்கு பிடிக்கவந்தோம்" என்று. அப்போது எனக்கு இது அர்த்தமாக வில்லை. இப்போது இதை வாசிப்பவர்களுக்கு அர்த்தமாகும். அந்நாள் முதலாக அவ்விரு மஹநீயர்களின் பரிசயம் மிகமிக விளைந்து அபிவிருத்தி யடைந்தது. அடியேன் சென்னையில் உபந்யாஸம் தொடங்கினநாளில் அவ்விருமஹான்களும் தம்தம் கோஷ்டியாருடன் ஸபையை அலங்கரித்து ஆரம்பித்துவைத்தார்கள். நாளடைவில் ஒருமாதத்திற்குள்ளாகவே பலபல மஹநீயர்கள் பரம ஆப்தர்களாக ஆய்விட்டார்கள். அட்வகேட் S. கோபாலஸ்வாமி ஐயங்கார், அவருடைய பாகிநேயரான (ஹைகோர்ட் ஜட்ஜ்) S. வரதாசாரியார், M. D., ப்ரதர்ஸ் என்று ப்ரஸித்தர்களான பெரியார்கள் நால்வர். மாம்பலம், மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமி, மஹாமஹோபாத்யாய தாக்ஷிண்யத்ய கலாநிதிசாமிநாதையரவர்கள்; அப்பா அண்ட் கம்பெனி குடும்பஸ்தர்கள்.......என்றிப்படி எத்தனையோ பெரியோர்களை நிச்சலும் நினைக்கின்றேன். அந்த காலவிசேஷத்தை நினைக்கும்போது *தே ஹி நோ திவஸாகதா:!* என்ற பவபூதி ச்லோகத்தையே நினைந்து நைந்துள் கரைந்துருகு கிறேன்.

அப்போது ஸமீபமாகவே மார்கழிமாதம் வந்துநின்றது. தொடர்ச்சியாக மூன்று வருஷங்களில் காலைவேளையிலேயே திருப்பாவை ப்ரவசனம் நடைபெற்று வந்தது. நினைவுக்கு வருகிற விசேஷமிரண்டு கேளீர்;...திருப்பாவையில் (15) *எல்லேயிளங்கிளியே பாசுரத்தில் ("எல்லாரும் போந்தாரோ?" என்னும்போது) சற்று நிறுத்துவேன்; முன்னணியில் வீற்றிருக்கின்ற மேலே குறித்த பெரியார்கள் ஒவ்வொருவரும் சற்று எழுந்து 'அடியேன் போந்தேன்' அடியேன் வந்தாயிற்று என்பர்கள். சாத்துமுறைநாளில் *முப்பதும் தப்பாமே* என்றநுஸந்திக்கும்போது "முப்பதும் தப்பாமே வந்தவர்கள் கைதூக்கவேணும்" என்பேன்; பின்னணியிலுள்ளவர் பலர் கைதூக்குவர்கள்; முன்னணியிலுள்ள பெரியார்களிலொருவர், 'அடியேன் இரண்டுநாள் ஆப்ஸண்டு, மூன்று நாள் லேட்' என்பர்; மற்றொருவர் 'நான் ஒருநாள் ஆப்ஸண்டு ஒருநாள் லேட்' என்பர். இப்படியாக ஒரு கால்மணி காலம் விநோதம் நடைபெறும் இவைபோன்ற பல வேடிக்கைகள் நினைவுக்கு வருகின்றன. கிழவி கூந்தலை நினைத்துக் கொண்டு அழுவது போன்றவை யோதும்.

இவ்வாண்டு எனது திருப்பாவையுபந்யாஸம் நாற்பத்தைந்தாமாண்டென்று பரிகணிக்கப்பட்டுள்ளது. தொண்டைமண்டலம் ஸ்கூல் ஹாலில் பகவத்கதா ப்ரஸங்கஸபையின் மூலமாக இருபத்தேழு ஆண்டுகளும், உப்பட்டூர் ஆழ்வார் செட்டியார் சாரிடியில் ஸத்காலக்ஷேப ஸபையின் மூலமாகப் பதினெட்டு ஆண்டுகளும் ப்ரவசனம் நடைபெற்றிருக்கிறது. இவை தவிர, திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி யெம்பெருமான் ஸன்னிதியில் ஓராண்டும், சென்னை வாணீ மஹாலில் இரண்டாண்டுகளும் நடந்திருக்கிறது.

தொண்டை மண்டலம் ஸ்கூல் ஹாலில் இருபத்தேழாண்டு நடந்த காலத்தில் ஸ்ரீ ராமாயண ப்ரவசனம் இரு முறையும், பகவத் கீதா, ஸ்ரீ பாகவத

தசமஸ்கந்தம், ஆளவந்தார் ஸ்தோத்ரரத்னம், திருமந்த்ரார்த்தம், ஆசார்ய ஹ்ருதயம், ஸ்ரீ வசனபூஷணம், பகவத் விஷயம் இவற்றின் ப்ரவசனமும் நடை பெற்றிருக்கிறது. ஸ்ரீவசனபூஷணத்தில் த்ரிபாத்விபூதி ப்ரகரணமும், பகவத் விஷயத்தில் 9, 10 ஆகிய இரண்டு பத்துக்களும் முடிவு பெறுமலே நின்றிருப்பதை பக்தர்கள் அடிக்கடி நினைவூட்டி வருகிறார்கள். 1964 ஆம் ஆண்டில் ஹ்ருதய கோச வேதனை ஏற்பட்டதிலிருந்து வாரந்தோறும் இருமுறை ப்ரவசனம் என்பது நின்றே போயிற்று. மார்கழி திருப்பாவை மட்டும் இதுகாறும் ஓராண்டிலும் தடைபடாமல் நடந்து வந்திருக்கின்றது.

கீர்த்தி மூர்த்தியான பிரபல அட்வகேட் ஸ்ரீமதுபயவே. V. ராஜகோபாலா சாரியர் ஸ்வாமி (கீழ்ப்பாக்) இப்போதைய ஸத்காலக்ஷேப ஸபைக்குத் தலைவரா யிருந்து பலவாண்டுகள் நடத்திவைத்தார். அந்த ஸ்வாமியைப்பற்றி எழுத வேணுமானால் எத்தனை பக்கம்; எத்தனை புத்தகம் எழுதினாலும் போதாது. அவர் திருநாட்டுக் கெழுந்தருளின பிறகு அவருடைய ஸ்தானத்தை ஸ்ரீமான் ஊரா. ஜகன்னாத செட்டியார் அலங்கரித்து வருகிறார். ஸ்ரீ. உ. வே. A. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் ஸ்வாமி (முத்தியால்பேட்டை) C. ஸுப்பராயலு செட்டியார், A. V. கன்னைய நாயுடு, கராலபாடி ராதாகிருஷ்ணய்யா, புலிபாடி. ஸோமஸுந்தர ராவ், கொப்பரம் நடேச செட்டி; சீதள்ள சின்னிக்ருஷ்ண செட்டி போன்ற பரம ஆப்த பக்த மணிகளின் ச்ரத்தையையும் அபிமானத்தையும் ஆஸ்திக்யத்தையும் ஆதரத்தையும் அபிநிவேசத்தையும் தெரிவிக்க எனக்கு சப்தங்கள் கிடைக்க வில்லை. இவர்கள் தவிர, உயர் திரு. ஏகாம்பர முதலியார், V. N. தேவநாதன், R. நாராயணன், S. அண்ணாமலை முதலானோருடைய அன்பும் ஆர்வமும்... ...மேலே என்ன எழுதுவது? ஆழ்வார்களுக்கு எம்பெருமான் திறத்திலுள்ள ஆர்வத்திற்கும் விஞ்சியது என்று மனமார மெய்யே எழுதுகிறேன். ஸ்ரீமான் M. A. வெங்கட கிருஷ்ணன், குவளைக் கண்ணன்போல்வார் சிந்தனைக்கினியவர்கள்.

*இனி இவ்வருஷத்து நிகழ்ச்சியைச் சிறிது தெரிவிக்கிறேன்.*

நேற்றை ஐப்பசி கார்த்திகை மாதங்களில் அடியேனுக்கு உடல் நலம் திருப்திகரமாக இல்லை. உள்ளத்தில் உத்ஸாஹம் குறைவாகவே யிருந்தது, ஆனாலும் மணவாளமாமுனிகள் நம்பிள்ளை மஹோத்ஸவங்களில் இரவு சாத்து முறை கோஷ்டியில் நெடுநாளாக தினப்படி செய்துவருகிற உபந்யாஸத்தைச் சிறிதும் நிறுத்தாமலே செய்துவந்தேன். என் உடல்நலத்தில் குறையிருப்பதாக ஒருவரும் நினையாதபடியேதான் நடத்திவந்தேன். திருக்கார்த்திகைக்குப் பிறகு அசக்தி அதிகரிக்கத் தொடங்கிற்று இவ்வருஷம் மார்கழித்திங்களநுபவத்தை நம்மாழ்வார் ஸன்னிதியிலேயே வைத்துக்கொள்ளுவோமா? என்று நினைத்திருக்கையில் சென்னை ஸத்காலக்ஷேப ஸபைத் தலைவர்கள் மாமூல்படி பத்திரிகை யச்சிட்டு அனுப்பிவிட்டார்கள். கண்ணபிரானும் கோதையும் கைகொடுத்தருள்வர் களென்று துணிந்து சென்னை வந்துசேர்ந்தேன். முதல்நாள் (15—12—74) பிற் பகலில் திருவல்லிக்கேணியில் வேதவேதாந்தவர்த்திநீ ஸபையாரின் நியமனத்தை நிறைவேற்ற அங்கு விடைகொள்ள நேர்ந்தபோது ஸ்ரீ பார்த்தஸாரதி யெம்பெரு

மான் ஸ்வஸ்தானத்தைவிட்டு உபந்யாஸ மண்டபத்தருகே யெழுந்தருளியிருந்து *எங்கும் பக்கநோக்கறியான் என்பைந்தாமரைக்கண்ணனே* என்னும்படி குளிரக் கடாக்ஷித்தருளினன். அந்த க்ஷணத்திலேயே ஓர் உத்ஸாஹமுண்டாயிற்று. அதை அந்த ஸபையிலேயே விஜ்ஞாபித்தேன். அன்று முதலாகவே சென்னை டவுனில் எனக்கான ஜாகையில் வஸிக்க நேர்ந்தது.

மறுநாள் திங்கட்கிழமையன்று நாக்பூர், அலஹாபாத், கல்கட்டா, பாம்பே டில்லி முதலிய மகாநாடுகளிலிருந்தும், சேலம், கோவை, ஈரோடு முதலியவிடங்களிலிருந்தும் சென்னை விலாசத்திற்கு ஆப்தர்கள் எழுதிக் கிடைத்த கடிதங்களுக்கு எண்ணிக்கையே யில்லை. இக்கடிதங்களெழுதின மஹான்கள் தொண்டைமண்டலம் ஸ்கூல் ஹாலில் காலக்ஷேபம் நடந்துவந்தபோது அதில் தாங்கள் அந்வயித்திருந்ததாகத் தெரிவித்து மங்களாசாஸனமும் செய்திருந்தார்கள். சென்னையில் லிங்கசெட்டித் தெருவில் வாழும் ஸ்ரீமான் குமாரஸாமி செட்டியாரென்பவர் பழுத்தபழமாக விளங்குபவர் என்னேடொத்த பிராயமுடையவர் ஆரம்ப நாள்முதல் (அதாவது தொண்டைமண்டலம் ஸ்கூலில் காலக்ஷேபம் தொடங்கிய நாள்முதல்) நாளை வரையில் ஒருநாள்கூடத் தவருமல் வந்துகொண்டிருப்பதாக அடிக்கடி ஸபையில் பேசுபவர் முன்னடியாகவே வந்திருந்து குசல ப்ரச்நம்பண்ணி மங்களாசாஸனம் செய்தது..........இத்தகைய பல விஷயங்களை இங்கு நான் எழுதிக்கொண்டேபோனுல் அதற்கு முடிவு ஏற்படுவது அரிது. அடியேனுள்ளத்திலிருந்த அதைரியம் நீங்கி உத்ஸாஹம் கொழுந்துவிடத் தொடங்கிற்று என்பதற்காக இவ்வளவும் தெரிவித்தபடி. ஒருவாரம் வரையில் அதிகமான அசக்தியில்லாமல் உத்ஸாஹமாகவே உபந்யாஸம் நடத்திவந்தேன். * கீழ்வானப்பாசுரத்திலிருந்து உடலில் தளர்ச்சி அதிகரிக்கத் தொடங்கிற்று. உபந்யாஸ ஹாலுக்கு அருகேயுள்ள ஒரு ரூமிலிருந்து நான் ஹாலுக்குப் புறப்படும்போது "இன்று கால் மணி அல்லது அரைமணி பேசிவிட்டு இதற்குமேல் பேச சக்தியில்லை யென்று சொல்லிவிட்டு எழுந்துவந்துவிடுவோம்" என்று எண்ணிகொண்டே போவேன். ஹாலில்குழுமியிருக்கிற ரஸிகர்களையும் மஹாப்ரபுக்களையும் கண்டபோதே அசக்தி நீங்கி உத்ஸாஹம் தோன்றிவிடும். குரலும் எழும்பிவிடும். என் ஆயாஸத்தைக் காணும் சில ஆப்தர்கள் அருகே வந்து "அரைமணி பேசினுல் போதும், முக்கால மணி பேசினுல் போதும்" என்பர்கள்; அதைச் செவிஏற்காது. அவர்கள் தடை செய்வதே காரணமாக நேரம் அதிகமாகிவிடும்.

சென்னையில் நெடுநாள் ஹைகோர்ட் ஜட்ஜ் பதவி வஹித்திருந்து மூன்று வருஷகாலமாய் டில்லியில் ஸுப்ரீம் கோர்ட் ஜட்ஜ் பதவியில் அமர்ந்திருக்கின்ற உயர்திரு A. அழகிரிசாமி யவர்கள் தற்காலம் சென்னையை அலங்கரித்து வருவதால் அவர்களும், சென்னையில் ஹைகோர்ட் ஜட்ஜ் பதவியில் விளங்கி வருகின்ற ப்ரஹ்மஸ்ரீ V. சேதுராமன் அவர்களும் அடிக்கடி ஸபைக்கு விஜயம்செய்துகொண்டிருந்தபடியால் இவ்விருபெரியார்களும் என்னுடைய இருபக்கங்களிலும் வீற்றிருந்ததே உண்மையில் என் உத்ஸாஹத்திற்குப் புத்துயிரளித்தது. 13—1—75

(இதன் தொடர்ச்சி ராப்பர் 3-ம் பக்கம் காண்க)

காலை சாத்துமுறை யன்று ஆண்டாள் திருக்கலியாணமாகும் வரையில் இவ்விரு பெரியார்களும் சிறிதும் சிரமம் பாராமல் ஸபையில் வீற்றிருந்து தங்கள் அரும் பெருஞ் சொற்களால் ஸபைக்கு மங்களாசாஸனமளித்ததும் எதிர்பாராத பெரும் பேறுகளாம். இக்கட்டுரையை நான் 14-1-75 இரவு 2 மணிக்கு எழுதத்தொடங்கினேன். மணி நான்காகிறது. ஆயாஸம் அதிகமாகவேயுள்ளது. இடையிடையில் நின்று நின்று விச்ராந்தி பெற்றே எழுதலாகிறது. உள்ளத்தில் அதைரியம் அதிகரித்து வருவது கண்டு டாக்டரை அழைத்துவரட்டுமா? என்கிறார்கள். நிதானிக்கலாமென்கிறேன்.

திருக்குறளில் சொல்வன்மை யென்னுமதிகாரத்தில் "சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச் சொல்லை வெல்லுஞ்சொல் இன்மையறிந்து' என்பது ஒரு குறள். 'பிறர் கண்டனம் செய்ய இடமில்லாதபடி பேசு' என்பதாக இதற்குப் பொருள் கொள்வர்; அதுவன்று பொருள், 'தன்னைத்தானே கண்டித்துக்கொள்ள வேண்டாதபடி பேசு' என்பது பொருள். ஸபையில் பேசி முடித்த பிறகு "அதைப் பேசாமல் விட்டு விட்டோமே!, இதை யெடுத்துரைக்காமல் விட்டுவிட்டோமே! அதைச் சொல்ல மறந்தோமே........." என்றிப்படி மனக்குறைபடுவதுண்டே, அதற்கு ப்ரஸக்தியில்லாதபடி பேசவேணுமென்பதே குறளாசிரியரின் கருத்து. அங்ஙனம் பேசவேணுமென்னுமாசையினாலேயே ஆப்தர்களின் கட்டளையையுங் கடந்து பேசவேண்டியதாகிறது. இஃது எனது இயல்பு. நிற்கிறேன். P.B.A.

**தி. அ. அனந்தாழ்வான் விண்ணப்பம்.** காலக்ஷேப ஸபையில் 10—1—75ல் ஸ்ரீ. உ. வே. பண்டிட் P. R. வரதாசாரியர் ஸ்வாமியும். 12—1—75ல் ஸ்ரீ. உ. வே. கபிஸ்தலம் பண்டிட் A. ஸ்ரீநிவாஸாசாரியா ஸ்வாமியும், 13—1—75ல் ஸ்ரீமான் N. வேணுகோபால நாய்க்கர், B.A., B.L., அவர்களும் பேசினவை கட்டுரைகளாகத் தாமதித்துக் கிடைத்திருப்பதால் அவை அடுத்த இதழில் பிரசுரமாகும்.

---

ஸ்ரீ:

## பகவத் விஷயப்பதிப்பு பற்றிய விளம்பரம்.

திருவாய்மொழிக்கு நஞ்சீயர் அருளிச்செய்த ஒன்பதினாயிரப்படி, பெரியவாச்சான் பிள்ளையருளிச்செய்த இருபத்து நாலாயிரப்படி, தெள்ளியதா நம்பிள்ளை செப்புநெறியான ஈடு முப்பத்தாறாயிரப்படி ஆகிய இம்மூன்று வ்யாக்கியானங்களோடுங் கூடின பகவத் விஷயப்பதிப்பு நடந்துவருவது பற்றி ஏற்கனவே தெரிவித்திருக்கிறோம். இப்பதிப்பில் முதலிரண்டு பத்துக்கள் முடிவுபெற்று ஒரு ஸம்புடமாகச் சிறந்த பைண்டு செய்யப்பட்டு ஸித்தமாகியுள்ளது. அபேக்ஷையுள்ளவர்கள் தருவித்துக்கொள்ளலாம். இந்த ஸம்புடத்தின் விலை 15—00. போஸ்டேஜ் ரிஜிஸ்ட்ரேஷன் செலவுடன் 3 ரூ. கிடைக்குமிடம் க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3. சென்னையிலும் ஸ்ரீ ஸ்வாமியின் பிரதிநிதியான V. N. தேவநாதன் (213, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, ஜி. டி.) விலாசத்திலும் கிடைக்கும்.

இப்பதிப்புக்குக் கணிசமான உதவி புரிந்த பெரியார்கள்

1. ஸ்ரீமத்பரமஹம்ஸ திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமி.
2. " ஸ்ரீமந்நாராயணராமாநுஜஜீயர் ஸ்வாமி.
3. சென்னை V. S. R. சக்ரவர்த்தி ஐயங்கார்.
4. K. A. தேவராஜன், (சென்னை).
5. சித்தூர் Auditor K. V. நரஸிம்ஹன்ஸ்வாமி.
6. T. C. A. ஸ்ரீநிவாஸவரதன், I.C.S., New Delhi.

ரிஜிஸ்டர் நெ. 2975 ஸ்ரீராமாநுஜ

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப்பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடு
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்

*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503.

என்ற விலாசத்திற்கு அனுப்புக.

If un-delivered please return to :

P. B. ANNANGARACHARYA,
KANCHIPURAM. Pin Code 631503



To
Sriman / Srimathi

406. P.A. THIRUVENKATACHARYA,
16, M. I. Sannidhi Street,
SRIPERUMBUDUR.

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, Kancheepuram-631503.